# நூல் விளக்கம்


| | | |
|---|---|---|
| நூலின் பெயர் | : | பரமனும் பாமரனும்! |
| ஆசிரியர் | : | சுவாமி பிரபஞ்சநாதன் |
| மொழி | : | தமிழ் |
| வகை | : | உபதேசம் |
| முதற்பதிப்பு | : | 2022 |
| நூலின் அளவு | : | டெம்மி |
| பக்கங்கள் | : | 106 |
| தாள் | : | A5 (5.83” X 8.27”) |
| எழுத்து அளவு | : | 12 புள்ளிகள் |
| உரிமை | : | ஆசிரியருக்கு |
| கட்டமைப்பு | : | சாதா பைண்டு அட்டை |
| கணினி அச்சு | : | ஓம் கிராபிக்ஸ் |
| விலை | : | அகவிழிப்பு |

குருவே சரணம்

# பரமனும் பாமரனும்!

இந்த பேரண்டம் படைக்கப்படுவதற்கு முன்னால், ஆதியிலிருந்தே அந்த அகண்ட "**அறிவு**" ஒன்று மட்டுமே இருந்தது. அந்த சுத்த அறிவை **வெட்டவெளி, சுத்தவெளி, ப்ரஹ்மம், சிவம், இறைவன், பரமன்** என பலவாறாக அழைக்கப்படுகிறது.

அந்த அகண்ட அறிவை அறியக்கூடிய ஆர்வம், படைக்கப்பட்ட பிரபஞ்சத்திலே, ஒரு உயிரினத்திற்கு உண்டாகுமானால், அது உயிரினங்களிலேயே உயர் அறிவுப் பரிமாணத்திற்கு சிறிது, சிறிதாக உயர்ந்து வந்த உன்னத ஆறாம் அறிவு (மனம்) கொண்ட மனிதப் பிறவிக்கு மட்டுமே சாத்தியம் ஆகும்.

அதேசமயம், அத்தகைய ஆறாம் அறிவு (மனம்) கொண்ட அனைத்து மனிதர்களாலும், அந்த அகண்ட அறிவை அனுபவமாக்க முடியுமா? என்றால், அது அவரவர்கள் ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான எண்ணங்களின் ஏற்றத் தாழ்வுகளில் உள்ளது என்றே கூறப்பட வேண்டும்.

அதாவது, அறிவுப் பரிமாணத்திலே ஒரு அறிவு தொடங்கி ஆறாம் அறிவு வரை பல்வேறு படி நிலைகளைக் கடந்து மகத்தான மனித அறிவுக்குள் "**மனம்**" என்ற பகுத்தறிவைக்கொண்ட மனிதன், அந்த பேரறிவின் பிரதிபிம்ப பிரகாசம் தன்னுடைய மனதின் வாயிலாகப் பிரகாசிப்பதை அறிய விரும்பாமல், அனைவராலும் ஏற்றி வைக்கப்பட்ட எராளமான எண்ணங்களின் வலைப் பின்னல்களில் சிக்கிக்கொண்டு, சிற்றறிவு படைத்த மிருகங்களைப் போன்றே சிந்திக்கும் திறனை இழந்துவிட்டான் என்றே கூறப்பட வேண்டும்.

அதற்குக்காரணம், அந்த அகண்ட அறிவை தன்னுள்ளே தனித்துவமாய் உணர்ந்துக் கொள்கின்ற "**உயர்மனம்**" என்ற **ஆறாம் அறிவு** அவனிடம் இருந்தும், அதன் அடிப்படை அம்சங்களை அறிந்துக்கொள்ளாமல், உடலை "**நான்**" என்று கருதிக்கொண்டும், மனதை "**எனது**" என்று எண்ணிக்கொண்டும், ஏராளமான எண்ணங்களின் பிடியில் சிக்கியவனாக, அறியாமையில்

அகப்பட்டு, ‘**அஹங்காரம்**’ என்ற ஆணவ மலத்தில் அல்லல்பட்டுக் கொண்டிருக்கிறான்.

அதாவது, ஒன்றேயாகிய அந்த அகண்ட அறிவின் அதியற்புத வெட்டவெளியில் வெளிப்பட்ட இந்த ‘**பேரண்டம்**’ என்னும் “**பிரபஞ்சம்**” எல்லையில்லாமல் விரிந்துக்கொண்டே போகிறது.

அத்தகைய பிரபஞ்சத்தின் பிரத்யேக விரிவு என்பது, அதனுடைய படைப்புகளில் பிரதிபிம்பிக்கின்ற பிரபஞ்சமனதின் பேரறிவுப் பிரகாசம், அறிவுப்படி நிலைகளில் படிப்படியாக முன்னேறிய நிலையில், மனித உடலில் மட்டுமே, “**மனம்**” என்ற மகத்தான மனோ சக்தியைக் கொண்ட பகுத்தறிவு நிலைக்கு உயர்ந்து வந்து, அந்த அகண்ட அறிவே அனைத்திலும் பிரகாசிக்கின்றது என்பதை உணர்ந்த **உத்தம ஞானிகள்** இந்த பிரபஞ்சமனம் பலவாறாக பரிணமித்துக் கொண்டு, விரிந்துக்கொண்டே போகின்றது என்றனர்.

ஆனால், அறியாமையிலே அனைத்தையும் ஏற்றி வைத்துக்கொண்டு, அனேக எண்ணங்களின் பிடியில் சிக்கிய சில மனிதர்கள் எல்லாவற்றையும் துறப்பதே துறவு என்றும், அந்த துறவறத்தின் மூலம் மட்டுமே அந்த இறைவனை அறிய முடியும் என்றும் எண்ணிக் கொண்டு, அதன்காரணமாக, அனைத்து **ஆசைகளை விடுதல்** அல்லது **அனைத்தையும் துறத்தல்** என்பதே ஆன்மீகம் என்று கருதி, வீடு, மனைவி, மக்கள் என

எல்லாவற்றையும் துறந்துவிட்டு, **துறவி** என்று கூறிக் கொள்கின்றனர்.

ஆக, ஆசைகள் என்பதை அறவே அறுக்க முடியாத, அவல நிலையிலே உள்ள அவர்களது மனம் ஒன்றிலிருந்து, மற்றொன்றுக்கு தாவ முயற்சித்ததின் தவறான விளைவே, அனைத்தையும் துறப்பது துறவு என்ற முறையில், அவர்களது உடைகளை மட்டுமே மாற்றிக் கொண்டனர்.

**அணுவுக்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய்**
**கணுமுற்றி நின்ற கரும்புள்ளே காட்டி**
**வேடமும் நீறும் விளங்க நிறுத்தி**"

**(65.66.67 - விநாயகர் அகவல்)**

என்ற இந்த பாடல் வரிகளில் அவ்வை பிராட்டியார் நமக்கு கூறவருகின்ற ஆழமான உட்பொருள் என்னவெனில், அணுவிற்கு அணுவாய் அப்பாலுக்கு அப்பாலாய் நிற்கின்ற பரம் பொருளை உணர்ந்து, ஞான நிலையில் நிலை நிற்கும் உத்தம யோகிக்குத் துறவற வேடம் தேவையில்லை என்கிறார்.

துறத்தல் என்பதில், உண்மைப் பொருளை நமது திருவள்ளுவப் பெருந்தகை தெளிவு படுத்தி விடுகின்றார்.

**“மழித்தலும் நீட்டலும் வேண்டா உலகம்**

**பழித்த தொழித்து விடின்”. - திருக்குறள்.**

அதாவது, அக உலகை அறிந்துணர்ந்து, அதன் வாயிலாக மனதைத்துறந்து, முழுமையான ஞான (அறிவு) நிலையை அடைந்தபின்பு, ஒரு துறவிக்குத் தலையை மொட்டை அடித்துக் கொள்வதோ, திருநீறு பூசித் தாடி வைத்துக் கொள்வதோ, ஆடைகளைத் துறந்து அரைகுறை நிர்வாணத்தில் நிற்பதோ, அல்லது கஷாயம் போன்ற காவி உடைகளைக் கட்டிக் கொள்வதோ அவசியமில்லை.

அதாவது, உலகம் பழிக்கின்ற அல்லது வெறுக்கின்ற விசய, சுகங்களை மனதினால் ஒதுக்குவது அல்லது ஒழிப்பது மட்டுமே போதும், அதைவிடுத்து, அனாவசியமாக புறத்திலே அனைத்தையும் துறந்து, பற்றற்ற துறவி போன்று காட்சியளிக்கத் தேவையில்லை! என்கிறார்.

**“பற்றுக பற்றற்றான் பற்றினை அப்பற்றைப்**

**பற்றுக பற்று விடற்கு” - திருக்குறள்.**

அதாவது, தூய்மையான மனதைக் கொண்டு, அந்த மகத்தான மனம் இயங்குவதற்கு ஆதாரமான சுத்த அறிவைப் பற்றிக்கொள்ள வேண்டும். அந்த சுத்த அறிவை (இறைவனை) பற்றுவதால், பலவற்றிலும் பரிதவிக்கின்ற மனம் **“நான்”** என்ற தன்முனைப்பை

(அஹங்காரத்தை) தானாகவே இழந்து, அதன் வாயிலாக, மனம் தான் உதித்த இடத்தில் (சுத்த அறிவில்) ஒடுங்குகிறது என்கிறார்.

இதனைத்தான் தாயுமானசுவாமிகள் பின்வருமாறு பாடுகின்றார்.

**சினமிறக்க கற்றாலும் சித்தியெல்லாம் பெற்றாலும்**
**மனமிறக்க கல்லார்க்கு வாயேன் பராபரமே!**

அதாவது, கோபத்தை விட்டாலும், அட்டமா சித்திகளை பெற்றாலும், இருமைகளால் சூழப்பட்ட மனதை அந்த ஏக இறைவனிடம் (சுத்த அறிவிடம்) ஒப்படைப்பதே **உண்மையான துறவு** என்பதை, ஞான உலகம் நமக்கு போதிக்க வருகின்ற விசயமாகும்.

இது புரியாமல் ஏராளமான ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களினால், நம் உடலை "**நான்**" என்றும், மனதை '**எனது**' என்றும் அபிமானித்துக் கொண்டு, மற்றவைகளை துறந்து விட்டோம் என்று, நம்மை நாமே ஏமாற்றிக் கொள்கிறோம்.

ஆக, தனித்த (வியஸ்டி) மனதை தன்னுடைய '**மனம்**' என்று எண்ணியவாறு, அந்த எண்ணங்களுக்கு ஏற்றவாறு இருமைகளில் இயங்கிக் கொண்டுள்ளோம்.

ஆனால், அந்த அகண்ட அறிவில் வெளிப்பட்ட மொத்த (சமஸ்டி) **பிரபஞ்சமனம்** அனைத்து உடல்களிலும் பிரகாசிப்பதை அறியாமல், இது என் மனம், அது உன் மனம் என்று அறியாமையில் இருமைகளை கற்பித்துக் கொள்கிறோம்.

ஆனால், பிரபஞ்ச அறிவின் வியாபகத்திலே, அது ஒரு அறிவு தாவரத்திலே தொடங்கி, ஆறு அறிவு கொண்ட மனிதன் வரை புலன்களின் அடிப்படையில் வெளிப்பட்டு பிரகாசிக்கின்ற படிநிலைகளிலே, பிரத்யேக பகுத்தறிவு கொண்ட ஆறாம் அறிவாகிய மனதைக் கொண்ட மனிதனிடம் மட்டுமே அந்த **சுத்த அறிவு** முழுமையாகத் தன்னை அறியும் அறிவாக (மனமாக) உள்ளது.

அத்தகைய அதி அற்புத அறிவாற்றல் கொண்ட மனித "**மனம்**" அந்த பேரறிவின் பிரதிபிம்ப பிரகாசம் என்பதினால், அது பிரதிபிம்பிக்கின்ற உபாதிகளாகிய உடல்களின் தன்மைக்கு ஏற்றவாறு, அது தனித்தனி மனிதனுக்கு மட்டுமே உரித்தானது என்பது போன்ற ஒரு தவறான எண்ணத்தை எல்லோரும் ஏற்றி வைத்துக் கொள்கிறோம்.

ஆனால், அந்த அகண்ட அறிவின் அதி அற்புத சக்தியாக வெளிப்பட்ட பிரபஞ்ச "**மனம்**" என்ற '**மனோ சக்தி**', பிரதிபிம்பிக்கின்ற உடல்களின் தர வரிசையிலே குணபேதங்கள் காரணமாக **சத்துவம், ராஜஸம்** மற்றும்

**தாமஸம்** என்பதாகப் பிரிந்து, அதிலே அதிகமாக **சத்துவகுணம்** மட்டுமே கொண்ட பிரபஞ்ச மனமாகிய **ஈஸ்வரன்** (மனோ சக்தி) தன் மொத்த பிரபஞ்ச உடலில் உள்ள அந்தந்த உடல்களின் தன்மைக்கு ஏற்றவாறு **ராஜஸகுணம்** கொண்ட மனிதர்களாகவும், **தாமஸகுணம்** கொண்ட பறவைகள், மிருகங்களாகவும் வெளிப்பட்டு பிரகாசிக்கின்றான்.

இந்த குணபேதங்களில் ராஜஸம் மற்றும் தாமஸம் குறைந்து அதிகமாக **சத்துவகுணம்** மட்டுமே மனிதனிடம் மேலோங்க வேண்டுமானால், அவன் தன் மனதை இருமைகளற்ற தூய்மை நிலைக்கு உயர்த்தியாக வேண்டும்.

இருமைகள் (துவைதம்) என்பது என்னவெனில், இருக்கின்ற ஒரே இறைவன் (பரமாத்மா) தமது சக்தி வியாபகத்தை இந்த **பிரபஞ்சமாக** வெளிப்படுத்தி, அதன் வாயிலாக **படைத்தல், காத்தல்** மற்றும் **அழித்தல்** என்ற முத்தொழிலை புரிகின்ற ஈஸ்வர சக்தி நிலையில் **பிரபஞ்ச மனமாக** வெளிப்பட்டு, அந்த **சக்தி ஆற்றல்** ஒவ்வொரு உடலின் வாயிலாக, பேருணர்வு நிலையில் பிரகாசித்துக் கொண்டுள்ளது.

அந்த மகத்தான ஆற்றல் மனிதனிடம் மட்டுமே மகத்தான **மனோசக்தியாக** மாறி, பகுத்தறிவு கொண்டதாக வெளிப்பட்டு, விவேகத்துடன் கூடியதாக உள்ளதால், படைக்கப்பட்ட சீவர்களில் மனிதன் மட்டுமே,

இருமைகளைக் கடந்து, அந்த ஏக இறைவனை தன்னுள் உணர்ந்து, தன் மூலத்திற்கு திரும்ப முடியும்.

ஆக, யார் ஒருவன்? அந்த ஏக இறைவனின் **லீலா விநோதங்கள்** (சக்தி வியாபகம்) இந்த பிரபஞ்சம் என்றும், அவனது பிரபஞ்சமனதின் **மனோசக்தி** பல்வேறு பரிமாணங்களில் வெளிப்பட்டு, படைக்கப்பட்ட பல்வேறு உடல்களைப் பொருத்து, பலவாறாக பிரகாசிக்கின்றது.

இதை அறிந்துக்கொண்ட சாதகன் தன்னிடம் வெளிப்படுகின்ற பிரபஞ்சமனதின் பேராற்றலை பெருமிதத்துடம் அறிந்து, அதனை சத்துவ குணத்திற்கு உயர்த்தி, ஈஸ்வரத் தன்மையில் பிரபஞ்சமனதை உணர்ந்து, அதன்வாயிலாக, இருப்பது இறைவன் மட்டுமே என்பதை பெருமிதத்துடன் ஏற்றுக்கொண்டு, அந்த பேருணர்வு பிரகாசம் இந்த மனதின் மூலம் வெளிப்படுவதினால் இந்த பிரபஞ்சம் இயங்குகின்றது என்பதை அறிந்து, எல்லாவற்றையும் ஈஸ்வர காரியமாக காண்கின்ற தூய மனம் எவருக்கு உண்டாகின்றதோ, அவர்கள் மனம் மட்டுமே, அந்த ஏக இறைவனில் (சுத்த அறிவில்) இரண்டறக் கலந்துவிட முடிகின்றது.

ஆக, மனிதனிடம் மட்டுமே, அந்தப் பேரறிவுப்பிரகாசம் அவனது மனமாக பிரகாசித்து, உயரிய அறிவாக தன்னை விசாரித்து அறியக்கூடிய, அடுத்தடுத்த மனோ அடுக்குகளின் மேல் தளங்களுக்கு பயணிக்கின்றது.

அதன் வாயிலாக மனிதன் மட்டுமே தன் மனதை **மனம், புத்தி, சித்தம், அஹங்காரம்** மற்றும் **உள்ளம்** என்றவாறு, பலப்படி நிலைகளில் பயணித்து, பலவாறாக விரிந்துக்கொண்டே இருக்கின்ற மனதை உணர்ந்து, அந்த மனதின் விரிவே, இந்த பிரபஞ்ச விரிவு என்பதை அறிந்து, அந்த மனதை ஏக அறிவுடன் இணைத்துக் கொள்வதே "**இறவாப்பெருநிலை**" என்பதாகும்.

இவ்வாறு, தனி மனிதனுடைய மனம் அவனது அகத்தில் அனேகப்படி நிலைகளில் படிப்படியாக விரிவதைக் கொண்டே, இந்த பிரபஞ்சத்தின் ஒட்டு மொத்த "**பிரபஞ்சமனம்**" விரிந்துக் கொண்டே இருக்கிறது என்ற பேருண்மையை உபதேசித்த உத்தம மெய்ஞ் ஞானிகளின் வரிசையிலே, இன்றைய நவீன விஞ்ஞானிகளும் உள்ளனர்.

அதனால்தான் அவர்களும் இந்த **பிரபஞ்சம்** இன்னும் விரிந்துக்கொண்டே போகிறது என்கின்றனர்.

ஆக, அந்தப் பேரறிவுப்பிரகாசம் மனோசக்தியாக வெளிப்பட்டு பிரதிபிம்பிக்கும் பிரபஞ்சத்தின் பல்வேறு உடல்களின் தரவரிசையில், ஜடப்பொருட்களில் அந்த மனம் வெளிப்பட முடியாதவாறு அதீத ஆழ்நிலையில் அமிழ்ந்து உள்ளது.

அதுவே, உயிருள்ள உடல்களாகிய **தாவரங்கள்** என்பதில் **ஒரு அறிவு** என்றும், **புழு, பூச்சிகள் இரு**

**அறிவுகள்** என்றும், **ஓணான், பாம்பு** போன்றவைகள் **மூன்று அறிவுகள்** என்றும், சில **பறவைகள் நான்கு அறிவுகள்** என்றும், **மிருகங்கள் ஐந்து அறிவுகள்** என்றும், **மனிதன் ஆறு அறிவுகள்** என்றும், அவையவைகளுக்கு கிடைத்திருக்கின்ற புலன்களின் அடிப்படையில் அறிவுப் படிநிலைகளில் மாறுபடுகின்றன.

அத்தகைய அறிவுப்படி நிலைகளில் பகுத்தறிவு கொண்ட மனிதன் மட்டுமே, அந்த அகண்ட அறிவை தன்னுள்ளே அனுபவமாகக் கண்டு, அப்படியே பிரமித்துப்போய், இந்த மொத்த பிரபஞ்சத்தின் ஒட்டுமொத்த இயக்கமும், இங்கு நடைபெறுகின்ற அத்தனைக் காரியங்களும், அந்த ஏக அறிவின் (சிவத்தின்) எல்லையில்லாத ஆற்றல் (சக்தி) என்று அறிகிறான்.

அத்துடன் அந்த ஏக அறிவே மனமாக வெளிப்படுகின்றது என்றும், அந்த மனமே அனைத்தையும் அறிகின்ற அறிவாக அந்த உணர்வுப் பெருவெளியில் உள்ளது என்றும் உணர்ந்துக்கொண்ட உத்தம ஞானிகள், இதில் **என் செயலாவது ஏதுமில்லை!, எல்லாம் அதன் செயலே**! என அந்த ஏக அறிவின் இருப்பிலேயே எப்போதும் இருந்துக் கொண்டுள்ளார்கள்.

அந்த ஏக அறிவு மனித உடலிலே மனமாக பிரகாசிக்கவில்லையென்றால் **தன் இருப்பை** அறிவது யார்? அல்லது அனைத்தையும் அறிய **ஆசைப்படுவது**

எது? என மகத்தான மனதின் விசாரணையில் விடைக்காண முயற்சியை மேற்கொண்ட மனிதன் இந்த ஒட்டு மொத்த பிரபஞ்சமனமே ஈஸ்வரத்தன்மையில் இருந்துக்கொண்டு, எல்லாவற்றையும் **படைக்கிறது, காக்கிறது, அழிக்கிறது** என்ற பேருண்மையை அறிகிறான்.

அவ்வாறு, அந்த அறிவை அகத்தில் அறிவதை **மெய்ஞ்ஞானம்** என்றும், புறத்தில் அறிவதை **விஞ்ஞானம்** என்றும் கூறப்படுகின்றது.

படைக்கப்பட்ட பல்வேறு உடல்களின் தர வரிசையில் எந்த மிருகங்களுக்கும், பறவைகளுக்கும் ஏன்? மற்ற புழு, பூச்சிகளுக்கும் தன்னை '**இன்னார்**' என்று தெரிந்துக்கொள்ள முடியாது.

ஆனால், மனிதன் மட்டுமே **தன்னை யார்?** என்று தனக்குக் கொடுக்கப்பட்டுள்ள பிரத்யேக உடலின் வாயிலாக பகுத்தறியக்கூடிய மகத்தான மனதில், தன்னைத்தானே விசாரித்து, இந்த **உலகம், இறைவன்** மற்றும் **தன்னைப் பற்றிய அறிவை** அடைய முடியும்.

அதைவிடுத்து, புறத்திலிருந்து சேகரிக்கப்பட்ட பல்வேறு புற விசயங்களை "**அறிவு**" என்று நினைத்துக் கொண்டு, அதனால் அதிகம் படித்தவன் மட்டுமே அதி புத்திசாலி என்று கருதிக்கொண்டு, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களின் ஆதிக்கத்தினால், அடிக்கடி

அல்லல் பட்டுக்கொண்டு, அறியாமையில் இருக்கின்ற மனித மனம் அந்த பேரறிவின் பெருமிதத்தை தன்னுள் உணர முடியாது.

ஆனால், அந்த அகண்ட அறிவை அறிய விரும்பும் **ஆத்ம சாதகர்கள்** மட்டுமே, அரிதான மனித **உடல்** தனக்கு கொடுக்கப்பட்டுள்ளது. அத்துடன் அதற்கேற்ற தகுதியான பகுத்தறிவு கொண்ட **மனம்** இயங்குகின்றது.

அந்த **உடல் - மனம்** இயங்கவேண்டுமானால், அதற்கு ஆதாரமான அறிவாக '**நான்**' என்னும் என்னுடைய **சுயப்பிரக்ஞை** என்றுமே நிலைத்து நிற்க வேண்டும் என்பதை உணர்ந்துக் கொண்ட உத்தம ஞானிகள் தங்களுக்கு கிடைத்துள்ள மனிதப்பிறவியை மகத்துவம் நிறைந்த பிறவியாக மாற்றிக் கொள்கிறார்கள்.

அதுவே, சாதாரண மனிதர்கள் தங்கள் மனதில் வடிவமைத்துக் கொண்டிருக்கும் "**நான்**" என்ற தன் அகங்கார எண்ணங்களுக்கு ஏற்றவாறு, தனக்கான ஒரு தனித்துவமான வடிவத்தை (சாதி, சமயம், கல்வி, உத்தியோகம், அந்தஸ்து) உண்டாக்கிக்கொண்டு, நம் ஒவ்வொருவருக்கும் தனித்தனியான ஒரு '**நான்**' இருக்கின்றது என்று கருதிக்கொண்டு, அதிலே, என்னுடைய '**நான்**'வேறு, உன்னுடைய '**நான்**'வேறு என ஒருவரையொருவர் தங்களுக்குள் **உடல் - மனம்**

என்பதில் பிரிவினைகளை உண்டாக்கிக் கொண்டு இருமைகளில் இருக்கின்றார்கள்.

அதன்காரணமாகத்தான், **நான்** இன்னாருடைய மகன் அல்லது மகள், தாய் அல்லது தந்தை எனவும், சாதிகளின் அடிப்படையில் நான் இந்த சாதிப்பிரிவைச் சார்ந்தவன் எனவும், கற்ற கல்வியின் அடிப்படையில் நான் இந்த பட்டம் பெற்றவன் எனவும், உத்தியோகத்தின் அடிப்படையில் **நான்** மாவட்ட கலெக்டர், அல்லது வழக்கறிஞர் அல்லது மருத்துவர் எனவும், எதாவது ஒரு "**நான்**" இவர்களிடம் ஏற்றி வைக்கப்பட்டு, அதனையே தன்னுடைய வடிவமாக மாற்றிக்கொண்டு, அதிலேயே மனம் மயங்கியவர்களாக மாறி விடுகின்றார்கள்.

இது முற்றிலும் தவறான புரிதல்களினால் உண்டான அவர்களுடைய அறியாமையின் **மனமயக்கம்** எனலாம்.

அத்தகைய மன மயக்கத்தின் காரணமாக மனம்போன போக்கிலே போய்க்கொண்டுள்ள மனிதன் **பிறப்பு - இறப்பு** பற்றிய புரிதல் இல்லாமல், அழியக்கூடிய மனித உடலையே "**நான்**" என்பதாகக் கருதிக்கொண்டு, அந்த உடலிலே பிரகாசித்துக் கொண்டுள்ள அந்த ஏக அறிவின் ஆற்றலாகிய மனோசக்தியை '**எனது**' என்று எண்ணிக் கொண்டு, வந்து போகின்ற உடலின் இறப்பைக்கண்டு, அவர் இறந்துவிட்டார் என்று கூறிக் கொள்கின்றனர்.

மனிதர்களுக்கு **'இறப்பு'** என்பதைப் பற்றிய போதுமான விழிப்புணர்வு உண்டாக்கப்படவில்லை. அதனால்தான், **'நான்'** என்பதைப்பற்றியும் அவர்களுக்கு போதுமான புரிதல் இல்லை என்றே கூறலாம்.

இவைகள் இரண்டும் ஒன்றுக்கொன்று நெருங்கிய தொடர்புடையவைகள் எனலாம். அதாவது, மரணத்தைப் பற்றிய புரிதல் இல்லாமல் **'நான்'** என்னும் **சுயப் பிரஞ்ஞை** பற்றியும் மனிதர்களால் ஒன்றும் தெரிந்துக் கொள்ள முடியாது.

உண்மையில், அந்த அகண்ட அறிவாகவே இருக்கும் தன்னுடைய உண்மை சொரூபத்தை அறிய முடியாமல், அவல நிலையில் உள்ள மனிதர்கள் அந்த அகண்ட அறிவின் பிரதிபிம்ப பிரகாசமாக வெளிப்படும் மிகப் பரந்த மனதை (Broad Mind) அனாவசியமான ஆசைகளினால் சுருங்கிய மனமாக (Narrow Mind) மாற்றிக் கொண்டுள்ளனர். இதன் காரணமாக இவர்கள் அந்த அகண்ட அறிவை அறிய முடியாமல் அல்லல் படுகின்றனர்.

இதிலே, ஒருசிலர் தன்னை சுதாகரித்துக் கொண்டு, நான் **'இன்னார்'** என்று மற்றவர்களால் ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களைக் கொண்ட மனதின் ஏற்றத்தாழ்வுகளை விசாரித்துப்பார்த்து, விவேகத்தை அடைந்து, இருமைகளைக் கடந்து, தனது எல்லைக்கு

உட்படுத்தப்பட்ட மனதின் பிடியில் இருந்து விடுபட்டு, அந்த அகண்ட அறிவை அறிந்துக் கொள்கிறார்கள்.

அவ்வாறு, தன் வடிவத்தை இழந்து, வடிமற்ற அகண்ட அறிவை தன்னில் தானாய் தனித்துவமாய் இருமைகளற்ற நிலையில், அகத்திலே அனைத்தையும் சமமாகப் பாவிக்கின்ற பக்குவப்பட்ட மனதைக்கொண்ட மகத்தான மனிதர்களைத்தான் நாம் "**மெய்ஞ்ஞானிகள்**" என்று போற்றுகிறோம்.

மனதை தன்னுள்ளே (அகத்தில்) விசாரிக்காமல், மனம் போன போக்கிலே மற்றவர்கள் வாயிலாக ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களின் ஆதிக்கத்தினால் வெளியே (புறத்தில்) ஆய்வுகளை மேற்கொள்வதில் அதிக ஆர்வம் கொண்டவர்களைத்தான் "**விஞ்ஞானிகள்**" என்கிறோம்.

பொதுவாக, புறத்திலே அறிவை தேடுகின்ற இன்றைய விஞ்ஞானிகள் இந்த பேரண்டம் '**பொருளால்**' (Matter) ஆனது என்று கூறுகிறார்கள்.

அதனடிப்படையில்தான் அவர்களது அனைத்து ஆராய்ச்சிகளும் அமைந்துள்ளன.

ஆனால், அந்த பொருள் என்பது எது?

அது எப்படி உண்டானது? என்பதை எந்த விஞ்ஞானிகளும் இதுவரை விடைக்காண முடியவில்லை. அதேசமயம், பொருளும் (Matter), அதன் சக்தியும் (Energy) அடிப்படையில் ஒன்றுதான் என்பதை மட்டும் ஏற்றுக்கொண்டு, அதற்கேற்ற ஆராய்ச்சிகளை அவர்கள் மேற்கொள்கிறார்கள்.

அதன் வாயிலாக, அவர்கள் கூற வருகின்ற **பொருளும், சக்தியுமாக வியாபித்து இருப்பது எது?** என இவர்களது புற ஆராய்ச்சியில் இன்னும் புரிந்துக் கொள்ள முடியவில்லை என்றே கூறலாம்.

அதற்குக்காரணம், அவர்கள் அகத்தை விடுத்து, இந்த அண்டத்தில் புறத்தில் (வெளியே) தேடுகிறார்கள். இதில், இன்னும் சில புதிய, புதிய விசயங்களை இந்த உலகிற்கு கண்டறிந்து கூறிக் கொண்டிருக்கிறார்கள்.

அத்துடன், இன்னும் பல விஞ்ஞானிகள், ஏற்கனவே ஏற்றி வைத்துக்கொண்ட பழைய நம்பிக்கைகளின் அடிப்படையில் அவர்களது ஆராய்ச்சிகளை இன்றும் மேற்கொள்கிறார்கள்.

பொதுவாக, இன்றைய மனிதனின் எண்ண ஓட்டங்கள் எல்லாமே விஞ்ஞானம் சார்ந்து காணப்படுவதால், அந்த விஞ்ஞானிகள் கூறுவதை மட்டுமே உண்மை என்று ஒப்புக் கொள்கிறார்கள்.

அதற்குக்காரணம், இன்றைய மனிதன் கற்கின்ற கல்வித்திட்டமும் புறத்தில் உள்ளதை உண்மை என்பதாக ஒப்புக்கொள்ள வைக்கின்றது.

அதற்குக்காரணம், **உண்மை** (சத்தியம்) என்பது என்னவென்று இவர்களுக்கு போதிக்கப்படாததுதான் ஆகும்.

உண்மை என்பது எப்பொழுதும் இருப்பது. அதை ஆக்கவும், அழிக்கவும் முடியாது. அப்படிப்பட்ட அழிக்க முடியாத உண்மையை அழியக்கூடிய அறிவியல் ஆராய்ச்சியில் ஒப்பிடுகின்றார்கள்.

மேலும், அழியாத உண்மையை வந்து போகின்ற பொய்யானவைகளுடன் ஒப்பிடுகின்றார்கள். அதன் காரணமாகத்தான் அவர்கள் இந்த உடலை உண்மை என்று நம்புகின்றார்கள். உலகத்தை உண்மை என்று நம்புகின்றார்கள்.

ஆனால், அந்த மெய்யை அறிவதற்கு இந்த உடலாகிய மெய் அவசியம் என்பதை அறியாமல், அந்த உடலையே மெய் என்று கருதிக்கொண்டு, அழியக்கூடிய உடலை அழியாமல் செய்கின்ற செப்படி வித்தையைக் கற்கிறார்கள்.

**மெய்** என்றால் **உண்மை** அல்லது சத்தியம் என்று பொருள். அந்த **மெய்** என்ற சொல்லுக்கு தமிழ் மொழியில் இன்னொரு பொருள் **உடல்** என்பதாகும்.

அழியக்கூடிய உடலுக்கு மெய் என்று ஏன் தமிழ் மொழியில் பெயர் வைத்தார்கள் என்றால், "**தமிழ் மொழி தெய்வீகமானது. அதிவிரைவில் சுத்த சிவானுபூதியை அளிக்க வல்லது**" என வள்ளல் இராமலிங்க அடிகளார் உரைக்கின்றார்.

அது எப்படியெனில், நமது தமிழ் எழுத்துகள் **உயிர் எழுத்து, மெய் எழுத்து, உயிர்மெய் எழுத்து** என்றே உள்ளது.

அதாவது, உயிரான இறைவன் உடலான மெய்யில் இணைந்தாலே, அங்கு உயிர்மெய் கூடி, **இயக்கம்** உண்டாகின்றது. உடல்மட்டும் தனித்து இயங்காது. உடலோடு உயிரும் சேர்ந்தாலே இயக்கம்.

ஆக, மெய்யாகிய உடலிலே உள்ள சத்தியம் உயிரே!

அதுப்போல, தமிழ் மொழியில் மெய்எழுத்துக்கள் தனித்து இயங்காது. உயிர் எழுத்தோடு மெய் எழுத்தும் சேர்ந்தே இயங்கும்.

அதனால்தான் எட்டும் இரண்டும் எழுத்தாகி, ஓங்கார சொல்லாகி மெய்பொருளாக விளங்குகிறது!

எனவே, அறியாமையில் விளைந்த கல்வியைக் கற்றவர்கள் அந்த அகண்ட அறிவை அண்டத்தில் வெளியே (புறத்தில்) ஆராய்ந்து கொண்டிருந்த நேரத்தில், நம் பண்டைய ரிஷிகள் தங்களது பிண்டத்தின் உள்ளே (அகத்தில்) உணர்ந்து, உயரிய உண்மையை உலகிற்கு உரைத்தார்கள். அவைகளை நாம் **உபநிஷதங்கள்** என்று போற்றுகின்றோம்.

அத்தகைய அகண்ட அறிவை, பூரண வெளியை, உயரிய உண்மையை தன்னுள் உணர்ந்துக்கொண்ட உத்தம ஞானிகளைத்தான் நாம் "**மெய்ஞ்ஞானிகள்**" என்றும் போற்றுகிறோம்.

ஆக, இத்தகைய மெய்ஞ்ஞானிகளைப் போன்றே, இன்னும் சில விஞ்ஞானிகள் தன்னுள் அந்த பேரறிவை, அகண்டத்தை அறிந்து, உணர்ந்துக் கொண்டார்கள்.

அவர்கள் தங்களது அக ஆராய்ச்சியின் மூலம் அறிந்து, உணர்ந்துக் கொண்ட உன்னத கோட்பாடுகள் "**இந்த பேரண்டம் என்பது, நாம் நினைத்துக் கொண்டிருப்பது போன்று வெளியே இல்லை, அது மாபெரும் மனதில் உள்ள எண்ணத்தில் இருக்கிறது**" என்ற பேருண்மையை எடுத்துக் கூறுவதாக அமைந்தது.

இவர்களது, இந்த கோட்பாட்டை உற்றுக் கவனிக்கும்போது, ஒரு உயரிய உண்மையை அவர்கள் உணர்ந்துக்கொண்டார்கள் என்பதையும் அறிய முடிகிறது.

ஆக, இந்த பிரபஞ்சம் **பொருளால் ஆனதா?** அல்லது **பிரக்ஞையால் ஆனதா?** என்ற ஆராய்ச்சியில், அவர்கள் கண்டுபிடித்த பெரும்பாலான உண்மைகள் நம்முடைய மெய்ஞ்ஞானிகளின் அருகே, அவர்களை அழைத்து வந்திருக்கின்றது என்பதையும் அறியலாம்.

இதைத்தான் நம் பண்டைய மெய்ஞ்ஞானிகளாகிய ரிஷிகள் "**பிரக்ஞானம் ப்ரஹ்ம**" **(உணர்வே இறைவன்)** என்று எடுத்துக் கூறினர்.

அதாவது, இந்த '**பிரபஞ்சம் பிரக்ஞையால் ஆனது**', அந்த **பிரக்ஞை** என்பது இந்த பேரண்டமாகிய பிரபஞ்சம் முழுவதும் வியாபித்திருக்கின்ற ஒரு மகத்தான **மனோசக்தி** என்றும், அது, அகண்ட பேரறிவாகிய வெட்ட வெளியின் **(சிவத்தின்)** வெளிப்பாடு என்றும், அந்த **சிவமும், சக்தியும்** சேர்ந்ததே இந்த பிரபஞ்சம் என்றும் இன்றைய நவீன விஞ்ஞானிகளால் ஏற்க முடிகிறது.

இந்த அரிய உண்மையைத்தான் நமது பண்டைய ரிஷிகளும், சித்தர் பெருமக்களும் தன் உள்ளத்தினுள்ளே உணர்ந்துக்கொண்டு, அந்த உயரிய பேரறிவின் வெளிப்பாடான மகாசக்தியாகிய **மனோசக்திதான்** இந்த

பிரபஞ்சத்தை உருவாக்கியது என்றும் எடுத்துக் கூறினார்கள்.

அவர்கள் கூறிய அந்தக் கூற்றை ஏற்றுக்கொண்ட சில விஞ்ஞானிகள், இந்த பிரபஞ்சம் என்ற '**பேரண்டம்**' ஒவ்வொரு விநாடியும் விரிந்துக்கொண்டே இருக்கிறது.

எனவே, அது நிச்சயமாக **சுயப்பிரஞ்ஞை** கொண்டது என்கின்றார்கள்.

அது எல்லையில்லாமல் இருக்கிறது. இதன் சக்தி வியாபகம் என்பது, இந்த பிரபஞ்சமே மறைந்து போனாலும், தொடர்ந்து இருந்துக் கொண்டேதான் இருக்கும்.

அது கால, தேசங்களுக்கு அப்பாற்பட்டது என்று அன்றைய நமது சித்தர் பெருமக்கள் அகத்தில் உணர்ந்துக் கூறியதை, இன்றைய விஞ்ஞானிகள் சிலரும் அக ஆராய்ச்சியின் மூலம் அங்கீகரிக்கிறார்கள்.

அதனைத்தான் இவர்களது ஆராய்ச்சியில் "**பரமாணு**" (God Particle) என்று கூறுகிறார்கள்.

அதாவது, இதுவரை அதனை பொருள் (Matter) என்று கூறிக்கொண்டிருந்தவர்கள், அதிலிருந்து வெளிப்படுகின்ற சக்தியை (Energy) இயக்கம் என்று கூறியவர்கள் தற்பொழுதுதான், அது **சுயப்பிரஞ்ஞை** கொண்ட **பரமாணு** என்றும், அதன் சக்திதான்

ஒப்புயர்வற்ற, இந்த **பிரபஞ்சம்** என்றும் ஒப்புக் கொண்டுள்ளனர்.

இதனைத்தான் நம் அன்றைய ரிஷிகள் இந்தப் பிரபஞ்சம் உணர்வுள்ளது என்றும், வெறுமனே கண்களுக்குத் தோன்றுவது மட்டுமல்ல இந்த பிரபஞ்சம், இதன் வெளித்தெரியும் பரிமாணம் பார்ப்பதற்கு ஒரு அம்சம் மட்டுமே என்றும், சாதாரணமாக புலன்களைக் கொண்டு இந்த பிரபஞ்சத்தைப் பார்க்கும்போது, **சூரிய, சந்திரர்கள், கிரகங்கள், பிற கோள்கள், எலெக்ட்ரான், புரோட்டான், நியூட்ரான்** போன்ற எல்லாவற்றையும் அதற்கான கருவிகளைக் கொண்டு கவனித்தாலும், அவைகளுக்கு அப்பாற்பட்டு இந்தப் **பிரபஞ்சம்** பல்வேறு பரிமாணங்களைக் கொண்டது என்பதையும் அறிய வேண்டும்.

அதனால், இந்த **பேரண்டம்** என்ற **பிரபஞ்சம் உயிருள்ளது, உணர்வுள்ளது, அறிவுள்ளது** என்று அறியப்பட வேண்டும்.

அத்துடன், நாம் இங்கிருந்து கொண்டு, இந்த பிரபஞ்சத்தை புறத்தில் கண்டு, இது எப்படிப்பட்டது? என்று ஆராய்ச்சிகள் மேற்கொண்டிருக்கிறோம். அதன் உண்மைத் தன்மையை அறிய ஆவல் கொள்கிறோம்.

ஆக, நம்மிடம் உள்ள புலன்களைக் கொண்டு, இந்த அகண்ட அறிவாகிய **வெட்டவெளியை** ஆராய முயற்சிக்கிறோம்.

அதேசமயம், நம் கண்கள்தான் அனைத்தையும் காண்கின்றது என்பதினால், அதே கண்களைக் கொண்டு, நம்முடைய கண்களை நாம் காண முடியாது. அதாவது, அனைத்து காட்சிகளையும் காண்கின்ற கண்கள் தன்னைக் காண இயலாது.

ஆக, புலன்களுக்கு அப்பாற்பட்ட புறவிசயங்கள் அனைத்தையும் அறிகின்ற அறிவாக நம்முடைய **உணர்வே (பிரஞ்ஞை)** உள்ளது.

அந்த உணர்வினை உள்ளத்தில் உணர வேண்டுமாயின், அதற்கான அவசியத்தை அறிய வேண்டுமாயின், அதற்கான முயற்சியையும் மனிதன் மேற்கொண்டாக வேண்டும்.

எவ்வாறு, மின்சாரத்தை காண முடியாவிட்டாலும், அதை அனுபவத்திற்கு கொண்டுவருவது என்பது, அதன் பயன்பாட்டில் உள்ள மின் சாதனங்களில் மூலம் **ஒளி, ஒலி, இயக்கம், வெப்பம், குளிர்ச்சி** என எல்லாமாக வெளிப்படுவதைக்கொண்டு, அந்த மின்சாரம் இருப்பதை அறிகிறோம் அல்லவா?

அதாவது, நேரடியாக மின்சாரத்தை கண்கள் என்ற புலன்கள் வழியாக நாம் காண முடியாவிட்டாலும், அதனை மற்ற மின் சாதனங்களின் மூலம் அனுபவமாக்க முடிவது போன்று, அந்த உணர்வாகவே இருக்கின்ற **“நான்”** என்னை **(பிரஞ்ஞை - அறிவு)** நேரடி

அனுபவமாக அறிவது என்பது, என்னுடைய சக்தி வெளிப்பாடாக உள்ள **உடல், மனம்** போன்ற உபாதிகளைக் கொண்டுதான் உணர்ந்துக்கொள்ள முடியும்.

ஆக, அகத்திலும் புறத்திலும் ஆராய்ச்சிகள் மேற்கொள்கின்ற மனிதர்களாகிய நாம் உண்மையில் எப்படிப்பட்டவர்கள்?

நம்மிடம் உயிர், உணர்ச்சிகள், மனம், சிந்தனைகள், தன்னுணர்வு என்று எல்லாம் இருக்கிறது இல்லையா? அவைகள் அனைத்தையும் உள்ளடக்கிய நாம் உண்மையில் எங்கிருக்கிறோம்?

சற்றே யோசித்துப் பாருங்கள்!!!

ஆம்! ஆராய்ச்சிகள் மேற்கொள்ளும் நாமும், இந்த மொத்த பிரபஞ்சத்தினுள்தான் இருக்கிறோம் என்பதை அறியும்போது, நம்மை தாங்கிப் பிடித்துக் கொண்டிருக்கும் இந்த **பிரபஞ்சம்** நமக்கு வேறாகவும், உயிர், உணர்வற்ற ஜடமாகவும் இருக்க முடியுமா...?

நிச்சயம் அப்படி இருக்க முடியாது இல்லையா...?

எனவே, இந்த மொத்த பிரபஞ்சமும் **உயிருள்ளது, உணர்வுள்ளது, அறிவுள்ளது** என்பதை அறிவதற்கே அதீத அறிவு கொண்ட மனிதப்பிறவி தேவைப்படுகிறது.

ஆக, அந்த பிரபஞ்சத்திற்கும் மனம் உள்ளது, சிந்தனைகள் உள்ளது, **தன்னுணர்வு** உள்ளது என்பதை ஏற்க முடிகின்றது.

எனவே, இதைத்தான் பண்டைய ரிஷிகள், முனிவர்கள், சித்தர் பெருமக்கள் தங்கள் உள்ளுணர்வின் வாயிலாக, அந்த அகண்ட பேரண்டத்தின் **பேருணர்வை** உணர்ந்துக்கொண்டு, அதன் இரகசியங்களை இந்த உலகத்திற்கு அளித்தார்கள்.

அதாவது, இந்த பிரபஞ்ச **பிரக்ஞை** என்ற **'பேருணர்வு நிலை'** பல்வேறு பரிமாணங்களைக் கொண்டது. ஒவ்வொரு பரிமாணமும் தன்னளவில் கட்டுப்பாடுகளைக் கொண்டது.

இந்த **பிரக்ஞை** என்ற **பேருணர்வு** அனுபவம் பல தளங்களும், பல நிலைகளும் கொண்டது. ஜடமான பாறையிலிருந்து தொடங்கி, மறுபுறம் முழுப்பிரக்ஞை நிலையான **ஸ்திதப்ரக்ஞன்** என்னும் உயரிய நிலைவரை, பல்வேறு பரிமாண தளங்கள் கொண்டது.

**'ஸ்திதப்ரக்ஞன்'** என்றால், **'சுத்தப் பிரக்ஞையின் முழுமை தன்னில் ஸ்திரமாக நிலைத்தவன்'** என்று பொருள்.

இந்த பிரபஞ்சம் தோன்றுவதற்கு முன்னால், இந்த பிரபஞ்சத்தின் ஆற்றலாகிய சக்தி, அந்த அகண்ட ஆகாசத்துடன் (சிவத்துடன்) ஒன்றியிருந்தது. அப்போது,

அசைவேதுமற்று, குணபேதங்களற்று, பொருள் அற்று, அளவுகள் அற்று, காலவெளியற்று, எல்லையற்றதாக இருந்துக் கொண்டிருந்ததையே '**ப்ரஹ்மம்**' அல்லது "**சிவம்**" என்று கூறப்படுகிறது.

அந்த அகண்டாகார **ப்ரஹ்மம்** தன்னில் தானாய் இலயித்திருந்த நிலையில், தன் பிரமாண்ட பேருணர்வில் இருந்து வெளிப்பட்டுக் கொண்டிருந்த **பேருணர்வுப் பிரகாசம்** (அறிவுப்பிரகாசம்) அந்த அகண்ட வெளியில், முதன் முதலில் ஒரு புள்ளியில் தொடங்கி, அதன் முழுமையான ஆற்றல் "**சக்தி**" என்பதாக வெளிப்பட்டது.

அந்த ப்ரஹ்மத்தின் பேருணர்வாகிய பேராற்றல் கொண்ட **சக்தி** வெளிப்பட்டதின் வேகம் காரணமாக விளைந்த அசைவால் உண்டான **சத்தமும்** (நாதம்), **வெளிச்சமும்** (ரூபம்) இந்த பேரண்டத்திற்கான தோற்றப் புள்ளிகள் எனலாம்.

அந்த அசைவின் காரணமாக **காலம்** உண்டானது.

அதாவது, ஒரு அசைவு நிகழுமானால், அங்கு **காலம்** உண்டாகிவிடும் என்பதே அறிவியல்கூட, அறிந்து வைத்துள்ள ஆரம்பப்பாடம்.

அதன் அடிப்படையில், **கால - வெளி** அமைப்பு உருவானதும், தோன்றிய சக்தியிலிருந்து முதன்முதலாக

வெளிப்பட்ட பிரஞ்ஞையைத்தான் **பொருள்** தோற்றம் கொள்கிறது என்றனர்.

ஆக, அந்த சக்தியின் அசைவில் முதலில் ‘**ஒலி**’ தோன்றி, அதன்பிறகே ‘**ஒளி**’ தோன்றியதை அறிவியலும் ஒப்புக்கொள்கிறது.

அதாவது, அறிவியல் கூற்றுபடி, பெரு வெடிப்பின்போது, எழுந்த ஓசையை ‘**ஓம்**’ என்றும், அதன் பிறகு வெளிப்பட்ட வெளிச்சத்தை ‘**ஒளி**’ அல்லது ‘**சோதி**’ என்றும் அறியலாம்.

பொதுவாக, இந்த உலகில் உள்ள அனைத்து படைப்புகளுக்கும் பின்னால் ஒரு **சக்தி** இருக்கிறது.

அதை ‘**ஈஸ்வரசக்தி**’ என்று சாஸ்திரம் கூறுகிறது.

அந்த சக்திக்கு ஒரு பெயர் வேண்டும். அந்த பெயரோ, அந்த சக்தியின் படைப்பாற்றலை குறிக்கும் சொல்லாகவும் இருக்க வேண்டும். மேலும் இயற்கையான சொல்லாகவும் இருக்க வேண்டும். எனவே, “**ஓம்**” என்ற சொல்லை நமது ரிஷிகள் தேர்ந்தெடுத்தார்கள்.

“**ஓம்**” என்று ஏன் தேர்ந்தெடுக்க வேண்டும்?

வேறு ஏதாவது ஒரு சொல்லை தேர்வு செய்திருக்கலாம் அல்லவா?

அதற்குக்காரணம், "**ஓம்**" என்ற சொல் மூன்று ஒலி சப்தங்களை உள்ளடக்கியது.

அவைகள், '**அ**', '**உ**', '**ம்**' என்பதாகும்.

இந்த மூன்று எழுத்தின் தொகுப்பு "**ஓம்**".

படைப்பாற்றத்தான் "**சக்தி**" என்று பார்த்தோம்.

அந்த படைப்பாற்றல் என்ன செய்யும்? முதலில் படைக்கும், பின் படைத்தவற்றை காக்கும், வேண்டாத அல்லது காலாவதியான படைப்புகளை அழிக்கும்.

அழிப்பது எப்படி படைப்பாகும்?

ஆம்! அதுவும் படைப்புதான்.

அதாவது, அழிக்காமல் படைக்க முடியாது.

ஒன்றை அழிக்காமல் இன்னொன்றை படைக்க முடியாது.

நாம் எதை படைக்க வேண்டும் என்றாலும், அதற்கு ஒரு சக்தி வேண்டும். அந்த சக்தி நாம் உண்ணும் உணவில் இருக்கிறது. அந்த உணவை உண்டு, ஜீரணம் செய்து, அதில் இருந்து பெற்ற சக்தியால் நாம் இந்த உடல் என்ற படைப்பை உண்டாக்குகின்றோம்.

அதாவது, பெரிய மலையை உடைத்து, அதில் இருந்து சிறிய கல் எடுத்து சிலை செய்கிறோம்.

இப்படி **அழிப்பதும், படைப்பதும்** சேர்ந்தே நிகழ்கிறது.

இந்த **படைத்தல், காத்தல், அழித்தல்** என்ற முத்தொழிலை **மூன்று கடவுள்கள்** செய்வதாக கூறுகிறார்கள்.

அந்த மூன்று கடவுளும் ஒன்றுதான்.

இந்த மூன்றும் ஒரு சக்திதான் என்றால், அதற்கு ஒரு பெயர் வேண்டும் அல்லவா?

அதன் பெயர்தான் **பிரணவம்** என்ற “**ஓம்**”.

அது எப்படி?

‘**அ**’ என்று சொல்லும் போது சொல் பிறக்கிறது.

‘**உ**’ என்று சொல்லும் போது அது நிலைக்கிறது.

‘**அ**’ என்ற சப்தத்தை நீண்ட நேரம் சொல்ல முடியாது. மூச்சு காற்று வேகமாக வெளியேறி விடும். ‘**உ**’ என்று சொல்லும் போது நீட்டி சொல்லலாம். இதிலே, ‘**ம்**’ என்று சொல்லும்போது அந்த சப்தம் முடிவடைகிறது.

இவ்வாறு, **தோற்றம், நிலைப்பு, முடிவு** என்ற மூன்றையும் ஒன்றாக சேர்த்து ஒரே வார்த்தையில் கூறுவதென்றால், அது “**ஓம்**” என்ற ஒற்றை வார்த்தையில்தான் முடியும்.

அதனால்தான், நம்முடைய ரிஷிகள் அந்த மகாசக்திக்கு, இந்த “**ஓம்**” என்ற சொல்லை தேர்ந்தெடுத்தார்கள். அதாவது, “**ஓம்**” என்ற பிரணவம் **படைத்தல், காத்தல், அழித்தல்** என்ற முத்தொழிலையும் கூறும் ஒரு மகத்தான சொல்.

அதாவது, இறைவனுள் ஒடுங்கிய பிரபஞ்சத்திற்கு அப்பால், இறைவனிடத்தில் இருக்கும் ஒரே விஷயம் ‘**ப்ரணவம்**’ ஒன்றுதான்.

‘**ஓம்**' என்னும் ஓங்காரம் மட்டும் அங்கே கால வெளியற்று, முதலும் முடிவுமற்று, தோற்றமும் மறைதலும் அற்று, உள் வெளியற்று “**ஓம்**” என்று ரீங்கரித்துக் கொண்டிருக்கிறது.

இதையே, இன்றைய விஞ்ஞானிகள் அணுவுக்குள் உள்ள **எலக்ட்ரான், புரோட்டான், நியூட்ரான்** போன்றவைகளில், புரோட்டானை மையமாகக் கொண்டு, சுற்றும் **எலக்ட்ரான்** வெளிப்படுத்தும் சக்தியைத்தான் ‘**ஆற்றல்**’ அல்லது “**சக்தி**” என்கின்றனர்.

மெய்ஞ்ஞானிகள் அந்த “**சக்தி**” ஆற்றலைத்தான் ‘**ஓம்**’ என்கின்றனர்.

மெய்ஞ்ஞானிகள், அந்த இறைவனை தூணிலும் இருப்பான், துரும்பிலும் இருப்பான் என்பதை எடுத்துக்கூறி, அந்த ஏக இறைவன் **அணு** ஆகவும், அகண்ட **வெட்டவெளி** ஆகவும் இருக்கிறான் என்கின்றனர்.

கண்களுக்குத் தெரியாத எவ்வளவோ விசயங்கள் இந்த கண்கள் முன்னால் இருக்கிறது.

அதாவது, **நுண்ணியிரிகள், அணு** என்று எவ்வளவோ இருக்கிறது. இவைகளை, **நுண்ணோக்கி** போன்ற கருவிகளின் உதவியால் நாம் காண்கிறோம்.

அவ்வாறே, தூரத்தில் உள்ளதை டெலஸ்கோப் என்ற **தொலைநோக்கிக் கருவியின்** உதவியால் காண்கிறோம். அந்த கருவியின் சக்தி அதிகமாக, அதிகமாக தூரத்தில் உள்ள பொருள்களைத் தெள்ளத் தெளிவாகக் காண முடியும்.

அதுபோன்றுதான், **காட்சி, சத்தம், வாசனைகள்** போன்றவைகளும்.

சரி. இதிலிருந்து என்ன தெரிகிறது…?

இந்த உலகம் என்பது நாம் அறிந்து வைத்துக் கொண்டது மட்டுமல்ல. நமக்குத் தெரியாத எவ்வளவோ இன்னும் இருக்கின்றது.

நம்முடைய கண்கள் முன்னே பல இருந்தும், அவைகளை நம் புலன்களால் அறிய முடிவதில்லை என்பதினால், அவைகள் இல்லை என்று கூறிவிட முடியுமா?

ஆக, அணுவுக்கு அணுவாயும், அப்பாலுக்கு அப்பாலும் இந்த **பிரபஞ்சம்** விரிந்து கொண்டே போகிறது. முடிவில்லாமல் விரிந்து கொண்டே போகிறது.

மேலும், இந்த பிரபஞ்சத்தில் அனைத்தும் ஒன்றோடு ஒன்று தொடர்பு கொண்டவைகளாகவும் உள்ளன.

ஒன்றிலிருந்து ஒன்று உருவாகின்றது.

சாதாரணமாக நாம் இவற்றை அறிவதில்லை.

**பொருள்கள், உயிர்கள்** அனைத்தும் ஒன்றோடு ஒன்று தொடர்புகள் கொண்டவை.

அது மட்டும் அல்ல! உணர்வுகள், உணச்சிகள், அவற்றின் வெளிப்பாடுகள் அனைத்தும் ஒன்றுக்கொன்று தொடர்பு கொண்டவைகள்.

இந்த தொடர்புகளின் வெளிப்பாடாகத்தான் **படைத்தல், காத்தல், அழித்தல்** என்ற முத்தொழிலை **ஈஸ்வரன்** செய்கிறான் என்றும், அந்த ஈஸ்வர சக்தியின் பெயரே "**ப்ரணவம்**" என்றும் கூறப்படுகின்றது.

அந்த **பிரணவம்** என்பது, '**காலம், வெளி**' என்னும் எல்லைக்குட்பட்ட இந்த '**பிரபஞ்சம்**' தோன்றுவதற்கு முன்னரே இருந்தது. இப்போதும் இருக்கிறது, இன்னும் இருந்து கொண்டுதான் இருக்கும்.

அது, எப்போதும் பிரபஞ்சத்தின் அடிநாதமாக ரீங்கரித்துக் கொண்டிருக்கிறது.

பரமன் (அறிவு) தன்னுடைய தியானத்திலிருந்து விழித்துக் கொள்கையில், உள்முகமாக இருந்த அவரது '**பிரக்ஞை**' (பேருணர்வு) வெளி முகமாகத் திரும்புகிறது.

ஆதியில் நிர்குணப் ப்ரஹ்மமாக இருந்தது, சற்குண ப்ரஹ்மமாக மலர்ச்சி கொள்கிறது.

அந்த சற்குணப் ப்ரஹ்மம்தான் இந்த பிரபஞ்சம் ஆகும்.

அதனைத்தான் '**ஈஸ்வரன்**' என்கிறது சாஸ்திரம்.

அதுமட்டுமல்ல, அந்த ஈஸ்வரனை "**மாயை**" என்றும் அழைக்கிறது சாஸ்திரம்.

சாஸ்திரம் ஈஸ்வரனை **மாயை** என்று ஏன் அழைக்கிறது?

அதாவது, எல்லையற்ற வெட்ட வெளியாகிய அந்த **பரப்ரஹ்மம்**, தன்னில் தானாய் தன்னுணர்வில் (அறிவு - Consciouness) தோற்றுவித்ததே இந்த மொத்த பிரபஞ்சம் என்பதினால், அந்த அசைவற்ற ப்ரஹ்மம் வெளிப்படுத்திய சக்தி (மனம் - Mind) அசைவதினாலும், அத்துடன், அதன் சக்தி வியாபகம் வந்து போவதினாலும், மேலும், ப்ரஹ்மத்தின் **பேருணர்வு வெளி (அறிவு)** புலன்களுக்கு புலப்படாது (காட்சிக்கு இல்லை) என்பதினாலும், அதை **மாயை** என்று கூறப்படுகிறது.

இந்த உலகம் இருப்பதை நாம் நம் புலன்களின் வழியாக அறிகிறோம்.

**அவ்வாறு அறிவது யார்?**

இந்தப் புலன்களுக்குப் பின்னால், மனத்தின் பின்னால் நின்று அனுபவம் கொள்ளும் '**நான்**' என்பது என்ன?

என்னுடைய நானுக்கும், உன்னுடைய நானுக்கும் என்ன வேறுபாடு இருக்கிறது?

நம் இருவருக்குள்ளும் '**நான்**' என்று உணர்வு கொள்ளும் **பிரக்ஞையின்** தன்மை ஒன்றேயல்லவா?

அதனால், பெண்ணானாலும், ஆணானாலும், பிச்சைக்காரனானாலும், குபேரனானாலும், வயதில் இளைஞனானாலும், வயோதிகனானாலும் இந்த '**நான்**' என்னும் **சுயவுணர்வு** ஒன்றாகத்தானே இருக்கிறது...?

அதாவது, சுயத்திற்கு எப்பொழுதுமே நிழல் கிடையாது.

அதாவது, சுயம்பிரகாச ஜோதியாகிய இறைவன் பேருணர்வு கொண்டவன் என்பதினால், அந்த பேருணர்வு என்பது அனைத்தையும் அறியும் அறிவுப் பிரகாசம் ஆகும்.

ஆக, அந்த சுயம் ஜோதிக்கு அருகே இருள் உண்டாக முடியாது. அதனால், அது நிழலற்றது எனப்படுகிறது.

ஆக, நம் **உண்மையான சுயத்துக்கு** நிழல் கிடையாது.

உண்மையில் நம் சுயம் ஒரு **ஒளிச்சுடர்.**

அந்த **ஒளிச்சுடர்** என்பது **அறிவுச்சுடர்** என்பதை அறியாமலுள்ள மனிதர்கள் தனக்கு நிழல் இருப்பதாகக் கருதிக்கொண்டு, நிழலைக்கண்டு பயப்படுகின்றனர்.

அதன்காரணமாகத் துக்கப்படுகின்றனர்.

அந்த நிழல் அவர்களுக்கு மட்டும் உண்டானதற்குக் காரணம், அவர்கள் மனதில் ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களே, அவர்களை ஒரு வடிவத்திற்கு உட்படுத்தி, **உண்மை சுயத்தை** அறிய முடியாதவாறு, பொய்ச்சுயத்தை (Ego) உருவாக்கியுள்ளது.

நம் சுய ஒளியை நாம் உணராதிருக்கும் நிலையில், மனதில் விழும் நம் பொய்யான நிழலை '**நான்**' என்றும், அதுதான் **என்சுயம்** என்றும் எண்ணிக் கொள்கிறோம்.

இது எப்படி இருக்கிறது தெரியுமா?

நமது உடலில் உள்ள கை, ஏதேனும் ஒரு பொருளை எடுக்கும் பொழுது, ‘**நான்**’**தான்** அந்தப் பொருளை எடுக்கிறேன் என்று அந்தக்கை நினைத்துக் கொள்வதற்கு ஒப்பாகும்.

உண்மையில், அந்தப் பொருளை அந்தக் கையா எடுக்கிறது?

இல்லை அல்லவா..?

அனைத்து உறுப்புகளையும் தன்னகத்தே கொண்ட மொத்த உடலாக உள்ள “**நான்**” அல்லவா? அந்தப் பொருளை எடுக்கிறேன்.

ஆனால், அறியாமையினால், அந்தக் கை ‘**நான் எடுக்கிறேன்**’ என்று நினைத்துக் கொண்டிருப்பது எப்படி வேடிக்கையாக உள்ளதோ...?

அப்படித்தான், இந்த உடலை “**நான்**” என்று நினைத்துக் கொண்டிருக்கிற நம் நிலையும் என்று அறியப்பட வேண்டும்.

உண்மையில், இந்த உடலுக்கு பின்னால் ஒரு “**நான்**” இருக்கின்றது. அதுதான் **உணர்வு,** அதுதான் **பிரக்ஞை.**

அதுதான், **அனைத்தையும் அறியும் அறிவு.**

அது இருப்பதினால்தான் இந்த உடல் அனைத்தையும் உணர்கிறது. அல்லது அறிகின்றது.

ஆகவே, இந்த மனித உடலில் உள்ள புலன்கள் வழியாகவும், மனதின் வழியாகவும் அனைத்தையும் அறிகின்றது எதுவோ, அதுவே "**நான்**".

அத்துடன், எதிலும் சம்பந்தப்படாமல், எல்லாவற்றையும் சாட்சியாகப் பார்த்துக் கொண்டிருப்பது எதுவோ, அதுவே, "**நான்".**

**காண்பவன் - காணுதல் - காட்சி** என்ற '**திரிபுடி**' மூன்றாக இருப்பதில், '**காணுதல்**' என்பது ஒன்று மட்டும்தான் அடிப்படையில் உண்மை என்பது நமக்குப் புரியவரும்.

நாம் காணும் அந்த நொடியில், '**நான்**' காண்கிறேன் என்ற **பிரக்ஞை** இருப்பதில்லை.

கண்டு முடிந்த அடுத்த நொடியில்தான் '**நான்**' கண்டேன் என்பதும், இதைத்தான் கண்டேன் என்பதும் நம் மனதில் உருவாகிறது.

காண்பவனாகிய நானும், காணப்பட்ட காட்சியும், '**காணுதல்**' முடிந்த பிறகு, மனத்தில் உதித்த எண்ண உருவங்கள்.

**காண்பவனும், காட்சியும்** காணுதலில் ஐக்கியமாகி, காண்பவன் என்று தனியே யாரும் இல்லாத '**காணுதல்**' மட்டுமே இருப்பதை உணர்ந்துக் கொள்ள முடியும்.

அந்தக் '**காணுதல்**' பிரபஞ்சத்தின் முழுமுதற் பிரக்ஞையின் '**காணுதல்**' என்று உணர்ந்துக்கொண்டு, ஒவ்வொருவருக்கும் உள்ளே உறையும் எல்லையற்ற அந்த பேருணர்வில் இரண்டறக் கலந்துவிட முடியும்.

எனவே, '**காணுதல்**' என்ற ஒரு நிகழ்வை, நித்தமும் சாட்சியாக காண்பது எதுவோ, அதுவே, "**நான்**" எனப்படுகிறது.

அந்த '**நான்**' என்பதுதான் '**பிரக்ஞை**', '**பேருணர்வு**', '**பேரறிவு**', '**உயிர்**', '**ஆன்மா**' என்று பலவாறாக கூறப்படுகிறது.

நம் ஒவ்வொருவரின் பிரக்ஞைக்கும் பின்னால் இருந்து, நம் புலன்கள், மனங்கள் வழியாக இந்தப் பிரகிருதியை (உலகத்தை) அனுபவம் கொள்ளும் '**நான்**' ஒன்றே ஒன்றுதான்.

ஒரு கையில் உள்ள பல விரல்கள்போல, அந்த மூலப்பிரக்ஞையின் பல **உடல்கள் - மனங்கள்** என எல்லாம் இருக்கின்றன. அந்தவகையிலே, மனிதப்

பிறவிகளாகிய நாம் அனைவரும், அடிப்படையில் ஒன்றுதான்.

அதாவது, நம் அனைவரின் **உடல்கள் - மனங்கள்** வழியாக, இந்தப் பிரபஞ்சத்தைக் கண்டு அனுபவம் கொள்ளும் '**நான்**' (**ப்ரக்ஞை**) ஒன்றே ஒன்றுதான் உள்ளது.

எவ்வாறு, ஒரே சூரியன் பல நீர் நிலைகளில் பிரதிபலிக்கும் பொழுது, நல்ல தெளிந்த நீரில் அந்த சூரியன் தெளிவாகவும், கலங்கிய குட்டை நீரில், அதே சூரியன் தெளிவற்றும் காணப்படுகிறது.

இருக்கின்ற ஒரே சூரியன், பல நீர் நிலைகளின் தன்மையைப் பொருத்து, பல விதமான சூரியன்கள் இருப்பதைப் போன்று காணப்படுகிறது அல்லவா?

அவ்வாறே, பிரபஞ்சத்தின் பேருணர்வாகிய ஒரே '**நான்**' பல **உடல்கள் - மனங்கள்** வழியாகப் **பிரக்ஞை** கொண்டு, அந்தந்த உடல்கள் மற்றும் மனங்களின் தன்மைக்கு ஏற்றவாறு பிரகாசிக்கிறது.

நல்ல தூய மனதில் உள்ளுணர்வு பிரகாசம் தெளிவாகவும், கலங்கிய மனதில், உள்ளுணர்வு பிரகாசம் தெளிவற்றும் உணரப்படுகிறது.

உண்மையில், அந்த பேருணர்வு (பேரறிவு) பிரகாசத்தினால், வெளிப்பட்ட மனதிற்கு தனித்துவமான **சுயம்பிரகாசம்** கிடையாது.

அதனால், அந்த **மனம்** பேரறிவு உண்டாக்கிய ஒளிப்பிரகாசத்தினால்தான் ஒளிர்கிறது என்பதை அறியாமல், அதில் ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களின் மூலம் ஒரு வடிவத்தை உண்டாக்கிக்கொண்டு, அதை "**நான்**" என்று நம்பிக்கொண்டு, இந்த உடலையும், மனதையும் அபிமானிப்பதுக் கொண்டிருப்பதைத்தான் **அறியாமை** என்றே கூறப்படுகிறது.

இந்த அறியாமையைத்தான் '**அஹங்காரம்**' (ego) என்றும் அழைக்கப்படுகிறது.

எனவே, உண்மையான "**நான்**" எது என்பதை அறியாமல், நிழலை "**நான்**" என்று கருதிக்கொண்டு, அந்த பேருணர்வின் "**பிரக்ஞை**" என்னும் '**உயிர்**' உடல்களில் இருப்பதை உணர முடியாத நிலையில், அந்தந்த உயிரினங்கள் தனித்தனியாக, தன்னை "**நான்**" என்று பாவித்துக் கொண்டு, தனது உடலையும், மனதையும் உண்மை என்று நினைத்துக் கொண்டு பரிதவிக்கின்றன.

அவ்வாறே, மனிதனும் “**நான்**” என்று தன் உடலை அபிமானித்துக் கொள்கிறான். மனதை ‘**எனது**’ என்று அபிமானித்துக் கொள்கிறான்.

இந்த **அஹங்கார, மமகார** உருவகங்கள் ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்களின் அடிப்படையில், மனதிற்கு உண்டானது.

ஆனால், உண்மையில், நாம் அனைவரும் **ஒரே உணர்வு வெளியில்தான்** இருக்கிறோம்.

நம்முடைய புலன்களுக்கு உட்படுகின்ற உணர்வை “**நான்**” என்றும், மனதிற்கு உட்படுகின்ற உணர்வை ‘**எனது**’ என்றும் அபிமானித்துக் கொள்கிறோம்.

ஆனால், அந்த தனித்த “**நான்**” என்ற உடல் அபிமானம் கொண்ட பரிமாணத்திற்கு பின்னால், இன்னும் சில சூட்சுமமான பல்வேறு பரிமாணங்கள் இருக்கின்றன. அந்த ஒவ்வொரு பரிமாணமும் மென்மேலும் நுட்பமான பல இயக்கங்களைக் கொண்டது.

அதிலே, ஒவ்வொரு பரிமாணமும் தனக்கேயான சுய உணர்வும், நம்பிக்கைகளும், அவைகள் சார்ந்த அனுபவ அறிவுகளையும் கொண்டு விளங்குகிறது.

அதில் **தனிச்சுயம்** என்ற **அஹங்காரம்** (ego) அதிகமாக வெளிப்படும் பொழுது, நாம் அந்த பேருணர்வு பரிமாணங்களில் இருந்து மெல்ல, மெல்ல கீழே இறங்குகிறோம்.

அந்த உயர் உணர்வாகிய **பேருணர்வு பிரஞ்ஞை**, இந்த பிரபஞ்ச பேருணர்வாக விரிந்திருக்கின்ற பேரறிவுப் பெருவெளியில் இருந்து, விலகி படிப்படியாகத் தன்னைத் தனி மனமாக, தனியொரு ஆறறிவு கொண்ட ஆளாக அறிகிறோம்.

அதன்காரணமாக, எல்லையற்ற பேரறிவாகவே "**நான் இருக்கிறேன்**" என்பதை அறிய முடியாத அளவிற்கு, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களின் பிடியில் சிக்கிக் கொண்டிருக்கிறோம்.

எனவே, இந்த அறியாமையிலிருந்து அவசியம் விடுபட வேண்டுமானால், நாம் அவசியம் விழித்துக் கொள்ள வேண்டும்.

**விழிப்பு** அல்லது **விழிப்புநிலை** அடைவது என்பது, மனதின் கட்டுப்பாட்டுக்குள் கிடையாது. காரணம், மனம் சமூகக் கலாச்சாரச் சக்திகளால் கட்டமைக்கப்பட்டது.

விழிப்புநிலை அடைதல் என்பது, மனதின் எல்லைகளைக்கடந்த, அந்த பேருணர்வின் ஆழ்நிலைச் சக்திகளைச் சார்ந்தது.

அப்படியானால், **நாம் எங்கே? எப்படி விழித்துக் கொள்வது?**

பொதுவாக, **‘நாம் இந்த பிரபஞ்சத்தில் இருக்கிறோம் என்று நம்புகிறோம். ஆனால், உண்மையில் இந்த பிரபஞ்சம்தான் நம்முள் இருக்கிறது’.**

இதை முதலில் நமது மனம் ஏற்றுக்கொள்ள வேண்டும்.

இதை ஏற்றுக்கொள்ள முடியாத அளவிற்கு, இந்த மனதில் ஏற்றி வைத்துக்கொண்டுள்ள ஏராளமான அறிவியல் குப்பைகளை (புற அறிவை) அப்படியே புறந்தள்ள வேண்டும்.

அப்பொழுதுதான், நம் அக அறிவை, அதாவது மெய்யறிவை, நமது சுயத்தை நாம் வெளிக்கொண்டு வர முடியும்.

நம் உண்மையான சுயத்தை நாம் அறிந்துக் கொள்ள வேண்டுமானால் '**நான்**' என்னும் உணர்வான பிரக்ஞையை, நம் மனம் மற்றும் உடல் ஆகிய இரண்டுடனும் தொடர்புபடுத்தி வைத்துக் கொண்டுள்ள, மனதின் நினைவுப் பதிவுகளிலிருந்து விடுவித்துக் கொள்ள வேண்டும்.

அதாவது, “**நான்**” என்பது **தன்னுணர்வு** மட்டுமே.

அது, இந்த **மனமோ, உடலோ** கிடையாது.

இதில் சந்தேகமற்ற நிச்சயத்தன்மை நமக்கு உண்டாக வேண்டும்.

வாழ்க்கை என்னும் எல்லையற்ற பெருங்கடலில் உலகம் என்பது ஒரு சிறு பகுதிதான். இங்கே பல சக்திகள் இயங்குகின்றன. இந்தச் சக்திகள் எதுவும் நமக்கு வெளியில் இல்லை. அனைத்தும் நமக்கு உள்ளேயே இருக்கின்ற பிரபஞ்ச சக்திகள்தான் என்பதை ஏற்றுக் கொள்ள வேண்டும்.

அதிலே, மனிதர்களாகிய நமக்கு மட்டுமே பிரத்யேகமாக கிடைத்துள்ள அகக் கரணமாகிய **மனம்** என்பது, இந்த பிரபஞ்சத்திற்கு வேறானது அல்ல.

**என்னுடைய தனித்த மனமும், இந்த மொத்த பிரபஞ்ச மனமும் ஒன்றே.**

அதனால்தான், நம் தனித்த மனதில் ஏற்றி வைத்துக் கொண்ட ஏராளமான எண்ணங்களின் பிம்பங்களையெல்லாம், இந்த வெட்ட வெளியில் பிரபஞ்சமாகக் காண்கிறோம்.

அத்துடன், அதை **உண்மை** என்றும் நம்புகிறோம்.

இதிலே, நம்மிடம் தெளிவும், திடமும், விழிப்பும் உண்டாக வேண்டும்.

உண்மையில், **இந்த பிரபஞ்சம் நம் மனதினால் மட்டுமே** படைக்கப்பட்டது.

அதாவது, **நாம் அகவயமாக (உள்ளே) இருக்கும் போது, எது மனமாக இருக்கிறதோ...? அதுவேதான், புறவயமாக (வெளியே) இந்தப் பிரபஞ்சமாகத் தெரிகிறது.**

இதில், '**உள்ளே**' என்பது உண்மையில் மனதையும் கடந்த ஒரு அகத்தளம்.

'**அகம்**' என்பது மனம் அல்ல.

அது, ஒரு எல்லையற்ற **அகப்பெருவெளி.**

அது மட்டும்தான் '**உள்ளது**'.

அதை உள்ளத்தில் உணர்வதே, உண்மையில் மனதின் படி நிலைகளில் உண்டான பக்குவம் எனலாம். அதாவது, மனம், புத்தி, சித்தம், அஹங்காரம் மற்றும் உள்ளம் என்ற படி நிலைகளில் மனம் உள்ளத்தில் அந்த உணர்வை உணர வேண்டும்.

அத்தகைய உள்ளம் என்ற அகப்பெருவெளியில் இருந்துதான் **அன்பு, ஆனந்தம்** என எல்லாமே ஊற்றெடுத்து வருகிறது.

நம் சீவனைப் பற்றிய உண்மை... இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றிய உண்மை... இறைவனைப் பற்றிய உண்மை... என எல்லாவற்றையும் அந்த அகவெளியில் அவசியம் நிலைக்கொள்ளும் பொழுது மட்டும்தான் அனைத்தையும் தெள்ளத் தெளிவாகத் தெரிந்துக் கொள்ள முடியும்.

ஆக, மனம் என்பது ஒரு **முப்பட்டைக் கண்ணாடி (Prism)** போன்றது.

பார்வையின் ஒளியை அது சிதற அடிக்கிறது.

காண்பவை எல்லாவற்றையும் அது சிதைத்துக் காட்டுகிறது. உண்மையின் அந்தச் சிதைந்த உருவம்தான் இந்த பிரபஞ்சம்!

இந்த பிரபஞ்சம் என்பது, நம்முடைய உணர்வு (பேரறிவு) வெளியில்தான் **உதிக்கின்றது, இருக்கின்றது, அழிகின்றது.**

ஆனால், அந்த **உணர்வுவெளி** (பேருணர்வு - பேரறிவு) எப்போதும் இருக்கின்றது.

அந்த உணர்வு வெளியைத்தான் “**சிதாகாசம்**” (அறிவாகாசம்) என்கிறோம்.

‘**சித்**’ என்பது ‘**பேருணர்வு நிலை**’.

‘**ஆகாசம்**’ என்பது ‘**இருப்பு**’.

அதாவது, நம்முடைய உள்ளுணர்வாகிய ‘**விழிப்புணர்வு**’ அல்லது ‘**பேருணர்வு**’ என்பது, “**வெளி**” என்ற உன்னத இருப்பில்தான் உண்மையில் உள்ளது.

ஆகவே, **சிருஷ்டி** என்ற **படைத்தல்** <u>பிரக்ஞையில் மட்டுமே நடக்கிறது.</u>

**யார் பிரக்ஞையில்?**

பரமனின் பிரக்ஞையில் நடக்கிறதா? என்றால், ஆம்!.

அந்த பரமானாக இருக்கும், நம் ஒவ்வொருவரின் பிரக்ஞையிலும்தான் இந்த **பிரபஞ்சம்** படைக்கப்படுகிறது.

உண்மையில், இந்த பிரபஞ்சம் எங்கே இருக்கிறது?

அது பார்ப்பதற்கு நம் உடலுக்கு வெளியில் இருந்தாலும், உண்மையில், அது நம் பிரக்ஞைக்கு வெளியில் இல்லை.

பிரபஞ்சம் உண்மையில் யாரோ ஒருவரின் பிரக்ஞையில்தான் (உணர்வில்தான்) இருக்கவும் முடியும்.

யாருமே பார்க்காத பிரபஞ்சம் என்று எதுவுமில்லை.

சிருஷ்டி பல நிலைகளில் நடக்கிறது.

எல்லோரும் காணக்கூடிய இந்தப் பிரபஞ்சம் சிருஷ்டியின் கடைசி நிலை எனலாம்.

எப்படி?

அதாவது, நேற்று இரவு நீங்கள் தூங்கச் சென்றவுடன், தங்களது ஆழந்த உறக்கத்தில், இந்த பிரபஞ்சம் மறைந்து விடுகிறது. அப்பொழுது, நீங்களும் இல்லை, இந்த பிரபஞ்சமும் இல்லை.

அதுவே, உங்கள் உணர்வு விழித்துக் கொண்டவுடன் மீண்டும், இந்த பிரபஞ்சம் உதிக்கின்றது. இவ்வாறு, தினம், தினம் இந்தப் **பிரபஞ்சம்** படைக்கப்பட்டு, காக்கப்பட்டு, அழிக்கப்படுகிறது.

யாரால்? படைக்கப்பட்டு, காக்கப்பட்டு, அழிக்கப்படுகின்றது?

அது, நம் **மனதால்தான்** என்றால், நம்ப முடிகிறதா?

**எல்லாம் யாரால்?** என்றால், அது **மனதால்தான்.**

அதனால், மனத்தைப் புரிந்துக்கொண்டு, அதில் ஏற்றி வைக்கப்பட்ட தவறான எண்ணங்களில் இருந்து விடுபட்டு, தெளிவான உள்ளத்தை உணர்ந்துக் கொண்டு, நம்முள்ளே விரிந்திருக்கும் அகவெளியில் (வெட்ட வெளியில்) நிலைக்கொண்டு, நின்றுப் பார்த்தால்தான் நம்மைப் பற்றியும், இந்த உலகத்தைப் பற்றியும், இந்த உலகத்தில் வாழும் மற்றவைகளைப் பற்றியும், அந்த மற்றவைகளுடன் வாழும் மக்கள் பற்றியும், அந்த மக்களைக் கொண்ட பூமியைப் பற்றியும், இந்த பூமியைப் போன்றே உள்ள மற்ற கோள்களைப் பற்றியும், மற்றும் அனைத்து அண்ட சராசரங்கள் அடங்கிய இந்தப் பிரபஞ்சத்தைப் பற்றியும் நமக்குத் தெளிவாக விளங்கும்.

ஆம்!, நம் மனமே ஈஸ்வரன். மனமே சக்தி. மனமே குரு.

அப்போது மட்டும்தான், மனப் பேய்களாகிய **காமம், குரோதம், லோபம், மோகம், மதம், மாச்சரியம்**

என்ற எண்ணற்ற எண்ணங்களாக, நம் மனதில் ஏற்றி வைத்துக்கொண்டு, மற்றவர்களைப் புண்படுத்தும் புற நடவடிக்கைகளான, இதுப்போன்ற இழிகுணங்களிலிருந்து நாம் முழுமையாக விடுபட முடியும்.

அத்துடன், நாம் வாழும் இந்தப் பிரபஞ்சம் அன்பின் அடிப்படை உருவாக்கம் என்ற பேருண்மையும் விளங்கும்.

நம் ஒவ்வொருவரின் உள்ளே விரிந்திருக்கும், அந்தப் புனிதமான, **எல்லையற்ற அகவெளியில்** புகுந்து, **காலமும் இடமுமற்ற, தொடக்கமும் முடிவுமற்ற** அகண்டத்தை அனுபவமாக்க வேண்டாமா?

மனதின் பார்வையில் இருள் போலத் தோன்றும் **வெட்டவெளி,** அதே மனதின் எல்லையைக் கடந்த நிலையில், அந்தப் **பேருணர்வுப் பெருவெளி** நம் உள்ளத்தின் உள்ளே **ஒளிமயமாய்** பிரகாசித்துக் கொண்டிருப்பதை அனுபவமாக உணர வேண்டாமா?

அந்த பேரண்ட பேருணர்வு வெளி, மனித உடலில், நம் உள்ளத்தில் **சிதாகாசமாக** நிலைக்கொண்டு, தன் பேருணர்வு, பேருண்மை சக்தியை, **தன்னுணர்வு** என்று, தனித்து தவறாக நாம் உணரக்கூடிய சாதாரண நிலையிலிருந்து விடுபட்டு, அந்த அகண்டமான சத்சிதானந்த உணர்வாக, ஒன்றாக உணரக்கூடிய உன்னத நிலைக்கு நாம் உயர வேண்டாமா?

இன்று நம்முடைய அனைவரின் வாழ்விலும் நிறைந்திருக்கும் துன்பங்கள் முடிவுக்கு வரவேண்டும் என்றால், நமக்குள்ளேயுள்ள அந்த **சுத்தப் பிரக்ஞையை** விழிக்கச் செய்வதில் மட்டும்தான் இருக்கிறது.

அவ்வாறு, விழித்துக் கொண்ட '**சுத்தப் பிரக்ஞை**' தன்னுடைய சுயம்பிரகாசத்தினால், ஆழ்மன இருளை அகற்றி, ஆனந்தத்தில் திளைக்க வைக்கும்.

மேலும், மேலும் பலரின் **பிரக்ஞையில்** இந்த விழிப்பு ஏற்பட, ஏற்பட இந்த உலகம் விழித்துக் கொள்ளும்.

மனித இனத்தின் அனைத்து விதமான துயரத்துக்கும் இறுதியானமுடிவு இது ஒன்று மட்டும்தான்.

ஆகவே, ஒருவன் தன்னை முதலில் அறிந்துக் கொண்டால் மட்டுமே, அவனால் இந்த தரணியையும், இறைவனையும் அறிந்துக் கொள்ள முடியும்.

ஆகவே புதிய உலகத்தின் விடியலை நோக்கி பயணிப்போம்!

அதற்காக என்ன செய்ய வேண்டும்?

இந்த உடலையும் மனதையும் கொண்டு, அந்த உன்னத உணர்வை உணர்ந்துக் கொள்ள முடியுமா?

ஆம்! முடியும்...!

அதற்காக செய்ய வேண்டியது என்னவெனில், ஒரு இடத்தில் அசைவின்றி அமர்ந்துக்கொண்டு, உடலுணர்வில் கவனத்தை நிறுத்தி, உடலைத் தளரவிட்டு, மூச்சின் கதியில் கவனத்தை இழையவிட்டு, நம் நினைவுகள் அனைத்தையும், இதுவரை அறிந்து கொண்ட அனைத்து புற அறிவுகளையும், ஒரு சில விநாடிகள் மனதின் பிடியிலிருந்து விலக்கி வைத்து விட்டு, எதைப்பற்றியும் சிந்திக்காமல் சற்று நேரம் அப்படியே, வெறும் '**நான்**' என்ற **தன்னுணர்வு** மட்டும் மிஞ்சும் நிலையில், நம் நினைவுச்சேகரத்தின் விவரங்கள் இல்லாமல், அதாவது, '**நான் இன்னார்**' என்று, ஏற்றி வைத்துக்கொண்ட எந்த வடிவமும் இல்லாமல், நம் சுயப்பிரக்ஞையில் (சுய உணர்வில்) சும்மா உட்கார்ந்துக் கொண்டிருந்தால் மட்டும் போதும்.

அந்த நினைவுகள் இல்லாத மனதில், கால உணர்வும் காணப்படாமல் மறைந்து, அந்த '**நான்**' என்ற உணர்வு, இந்த பிரபஞ்சப் பிரக்ஞையின் வெளிப்பாடு, அதுவே, தன்னில் தானாய் தன்னை உணர்கிறது என்ற '**விழிப்புணர்வு**' அனுபவம் நம் உள்ளே மலரும்.

இதை மட்டும், தினந்தோறும் சிறிது, நேரம் ஒதுக்கி செய்து வந்தீர்களேயானால், உங்களது **உள்ளுணர்வு** அந்த பிரபஞ்ச **பேருணர்வுடன்**

ஒருங்கிணைந்து, இந்த அகண்டமே “**நான்**” என்ற **ஈஸ்வரத்தன்மை** முதலில் உண்டாகும்.

அதன் பிறகு, அனைத்தையும் தன்னுள் காணும் அந்த அனுபவத்தின் வாயிலாக, மனம் கடந்த மகத்தான அந்த “**பேருணர்வு பிரகாசம்**” (அறிவுப் பிரகாசம்), ‘**நான் இருப்பதினால்தான்**’ என்னுள் உணர்வாக ‘**இருப்பு**’ கொண்டுள்ளது என்ற ஆனந்தமயமான **ப்ரஹ்மானுபவம்** உண்டாகும்.

அதாவது, நமக்குள்ளே நம் சுயப்பிரக்ஞையின் அடித்தளமாக இருக்கும் ‘**நான்**’ என்னும் அந்த **சுத்தப் பிரக்ஞைதான்** ப்ரஹ்மம் என்பதினால், ‘**எல்லாம் என்னிலிருந்து உதித்து, மீண்டும் என்னிலேயே ஒடுங்குகின்றன**’ என்கிற பேருண்மையை உணர்ந்துக் கொள்ள முடியும்.

அதாவது, நமக்குள்ளே இருக்கும் '**நான்**' என்ற <u>உணர்வின் (அறிவின்) அடிப்படையில்தான்</u> இந்த **மனம்** இயங்குகிறது என்பதையும் ஏற்றுக் கொள்ள முடியும்.

அங்கிருந்துதான் அனைத்து எண்ணங்களும் உணர்ச்சிகளும் எழுகின்றன.

ஒவ்வொரு கணமும், ஒவ்வொரு எண்ணமும் தன்னை '**நான்**' என்று நினைத்துக்கொள்கிறது.

அத்தகைய அனேக எண்ண '**நான்**'கள், இந்த உலகப் பிரக்ஞைக்கு அடிப்படையான '**நான்**' உணர்வாக மாறி, இந்த உலகத்தை அனுபவித்துவிட்டு, மீண்டும் எழுந்த அந்த மூலத்திலேயே போய் ஒடுங்கிறது என்பதும் விளங்கும்.

எண்ணங்கள் ஒவ்வொரு கணமும் '**நானிலிருந்து**' எழுந்து, இருந்து, அழிகின்றன.

ஆனால், இந்த எண்ணங்களுக்கு ஆதாரமான "**மனம்**" உண்டாகக் காரணமாக இருந்த உண்மையான '**நான்**' என்ற உணர்வு, தான் உண்டாக்கிய அந்த மனோ சக்தியினால் மறைக்கபட்டு, மனதை '**நான்**' என்று அபிமானிக்கக்கூடிய அவல நிலை உருவாவதற்குக் காரணம், நாம் அந்த **உணர்வில்** இருந்து பழகுவதில்லை. மாறாக, மனதில் இருந்து பழகுகிறோம்.

அதனால்தான். இதுப்போன்ற சிக்கல்கள் உருவாகி, **தன்னை அறியும் தன்மையை** எல்லோருமே இழந்து விடுகிறோம்.

எனவே, ஒவ்வொரு கணமும் '**நானிலிருந்து**' எழுந்து, இருந்து, அழிகின்ற மனம் உண்டாகி, மறைவது என்பது, அந்த பேருணர்வு மூலமாகத்தான் என்பதை அறிந்து, அந்த உணர்வே மனதை உதிக்க வைத்து, மீண்டும் அந்த மனதை தன்னுள் ஒடுக்கிக் கொள்கிறது

என்பதை உணர்ந்துக் கொள்ளும்பொழுது, **‘போக்கும் வரவும் புணர்வும் இலாப் புண்ணியனே,’** என்ற மணிவாசகப் பெருமானின் பாடல் வரிகள் விளங்கத் தொடங்கும்.

ஆகவே, **போக்கும் வரவும் இல்லாத** அந்த புண்ணியனாகிய அகண்டமான வெட்டவெளி, ஒவ்வொருவருக்குள்ளும் **உணர்வாக** (அறிவாக) பிரகாசித்துக் கொண்டிருப்பதை உணரும் பொழுது, அந்த உணர்வே (அறிவே), மனதின் வாயிலாக இந்த பிரபஞ்சத்தை படைத்து அனுபவிக்கிறது என்ற பேருண்மை புரியவரும் பொழுது, நம்முடைய மனம் படைத்த இந்த உலகத்தை நமக்கு சாதகமாகவும் மாற்றி அமைத்துக் கொள்ளவும் முடியும்.

இதனைத்தான் **பிரபஞ்ச ஈர்ப்பு விதி** (Law of attraction) என்று கூறப்படுகிறது.

அதாவது, நமக்குத் தேவையானவற்றை, இந்த பிரபஞ்சத்தில் இருந்து நம்மால் ஈர்த்துக்கொள்ள முடியும்.

எப்படி?

அதாவது, இந்த பிரபஞ்சத்தை சிருஷ்டி செய்தது, பேருணர்வு வெளிப்படுத்திய நம் மனமே என்பதினால், அசையாத ப்ரஹ்மம் **மனதின் மூலம்** இந்த பிரபஞ்சத்தை படைத்து அசைவது போன்று காணப்படுகிறது.

ஆனால், உண்மையில் ப்ரஹ்மம் அசைவற்றது.

அதன் அடிப்படையில், **பிரபஞ்ச சிருஷ்டி** அந்த மனோ சக்தியின் இயக்கமாதலால், அந்த உள்ளுணர்வை உள்ளத்தில் உணர்ந்தவர்களுக்கு அவர்கள் நினைப்பது நிச்சயமாக நிறைவேறும்.

அதாவது, நம் தனிப்பிரக்ஞை, பிரபஞ்சப் பிரக்ஞையோடு <u>ஒருங்கிணைந்து நினைத்தால்தான்</u>, நாம் நினைப்பது நடக்க முடியும்.

ஆகவே, மனதின் **சங்கல்பம்** என்பது, நம் தனித்த மனம் சார்ந்த விஷயமல்ல. அது **பிரபஞ்சமனம்** சார்ந்தது. அதைத்தான் **காரண தேகம்** என்று சாஸ்திரம் அழைக்கின்றது. அல்லது **சஞ்சிதகர்மா** என்று கூறப்படுகிறது.

மனிதனின் ஆக்கப்பூர்வமான **மனோசக்தி** மகத்தான அந்த பேருணர்வின் கட்டுப்பாட்டில் வரும் பொழுது, முழு மனதோடு நாம் என்ன நினைத்தாலும், அந்தக் கணத்திலேயே அது நடப்பதற்கான செயல் தொடங்கி விடுகிறது.

இதிலே கவனிக்க வேண்டிய மிக முக்கியமான விஷயம் என்னவென்றால், நம்மால் எந்த ஒரு விஷயத்தையும் முழுமனதோடு, அந்த <u>உணர்வுப்</u>

பூர்வமாக ஒருங்கிணைந்து நினைக்க முடிவதில்லை என்பதுதான்.

மனம் ஒன்றை நினைக்கும்போதே, அதற்கு நேர்மாறான வேறொரு விஷயத்தையும் நினைத்து விடுகிறது.

அதாவது, ஒரு குரங்கு சும்மா அமராமல், அடிக்கடி ஒரு கிளையிலிருந்து மற்றொரு கிளைக்கு தாவிக்கொண்டே இருக்குமோ? அப்படித்தான் நம் மனமும் சும்மா இருக்காமல் ஒரு எண்ணத்திலிருந்து, மற்றொரு எண்ணத்திற்கு தாவிக்கொண்டே இருக்கின்றது.

அதாவது, ஆசைகளினால் நம் மனம் அலைப் பாய்வதை அவசியம் கவனித்துப் பார்க்க முடிந்தால், இதுப்போன்ற விசயங்கள் எல்லாமே ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களின் அடிப்படையில், வெளிப் படுவதினால், நம்மால் மனதை சும்மா வைத்திருப்பதில் வெற்றி பெற முடிவதில்லை என்பதும் புரிய வரும்.

அத்துடன், நம்முடைய சக்தியின் பெரும்பகுதி, ஒவ்வொரு கணமும் **பொறாமை, கோபம், ஆற்றாமை, ஏக்கம், பகைமை உணர்வு, ஆசை, பயம், வன்முறை, அகச்சிக்கல்** என்று பலவிதமாக விரயம் ஆகிக் கொண்டுள்ளதையும் கவனிக்க முடியும்.

அதாவது, ஒரு அசைவற்ற கல்லிலே அதன் **பிரக்ஞை** என்பது, முற்றிலும் உள்முகப்பட்டு அதன் உள்ளார்ந்து இருக்கிறது. அதனால், '**நான் இருக்கிறேன்**' என்ற **சுயப்பிரக்ஞை** நிச்சயமாக அந்தக் கல்லிற்குத் தெரியாது.

மேலும், ஒரு தாவரம் அல்லது விலங்கு போன்றவைகள் உயிருள்ளதாகவும், உணர்ச்சிகளுக்கு கட்டுப்பட்டதாகவும் இருப்பதினால், அவைகளினாலும், அந்த **சுயப்பிரஞ்ஞையை** உணர முடியாமல் தன்னை யார்? என்று அறிந்துக் கொள்ள முடியாது.

ஆனால், மனிதர்கள் மட்டுமே தன்னிடம் உள்ள **பிரக்ஞை** என்னும் **தன்னுணர்வு** மூலம் தன்னை '**நான் இருக்கிறேன்**' என்று அறிந்துக் கொள்ள முடியும்.

ஆனால், அவர்களாலும் அவ்வாறு தன் சுயத்தை அறிந்துக்கொள்ள முடியாமல் இருப்பதற்குக் காரணம், அவர்கள் தங்களை இந்த **உடலாகவும், மனமாகவும்** பாவித்துக்கொண்டு, '**நான் இருக்கிறேன்**' என்று கூறிக் கொள்கின்றனர்.

இதுவே, இவர்களுக்குத் தன் **சுயபிரஞ்ஞையை** உணர தடையாக மாறி விடுகின்றது.

அதனால்தான், அவர்கள் உணர்ந்துக்கொண்ட **தன்னுணர்வு** என்பது, தங்கள் மனதின் அடிப்படையில் வடிவமைக்கப்பட்ட "**நான் இன்னார்**" என்று ஏற்றி வைத்துக் கொண்டதினால், அவர்களாலும் தங்களது **சுயபிரஞ்ஞையை** உணர முடியாமல் இருக்கிறது.

ஆக, மனதைக் கடந்த **பல பரிமாண தளங்களை** அவர்கள் உணரும் பொழுதுதான் அந்த **முழுப்பிரக்ஞை** நிலையை அவர்களால் அடைய முடியும்.

பொதுவாக '**நான் இன்னார்**' என்று நாம் ஒவ்வொருவரும் நம்பிக் கொண்டிருப்பது, நம்முடைய **நினைவுகளும், புத்தியும், கற்பனையும்** சேர்ந்து மனத்தளத்தில் உருவாகியிருக்கும் **ஒரு பிம்பம்** என்றே அறிய வேண்டும்.

தனி மனங்களைக் கடந்த பிரக்ஞையின் **சுயப்பிரகாச ஒளி** அந்தப் பிம்பத்தின் மீது பட்டுப் பிரதிபலிக்கும் போது, அந்தப் பிரதிபலிப்பின் வழியாக உடலும், மனமும் **சுயப்பிரக்ஞை** கொண்டு இயங்குகின்றன.

உண்மையின் இயல்பான **பிரக்ஞை** யாருக்கும் சொந்தமானதல்ல.

அது எல்லையும், வடிவமும் அற்ற ஒரு **உணர்வு வெளி**.

அது, அகண்டாகாரமானது.

அத்துடன் பிரபஞ்ச ரீதியானது.

உடலைக் கொண்டு வாழும் ஒவ்வொரு ஜீவனின் பிரக்ஞையிலும் அது பிரதிபலிக்கிறது.

ஒவ்வொரு ஜீவனும் தன் அறியாமையினால், அந்தப் பிரதிபலிப்பைத் தனியான ஒரு '**நான்**' என்று நினைத்துக் கொள்கிறது.

இதைத்தான் **அறியாமை** என்று சாஸ்திரம் சுட்டிக் காட்டுகின்றது.

ஒரு ஜீவனின் மரணத்தின்போது **மனம்** என்னும் அறிவு மண்டலம் செயலற்றுப் போய்விடுகிறது. அதனால் அதில் பிரபஞ்ச ரீதியான '**நான்**' பிரதிபலிப்பதில்லை. அந்த உடலிலும், மனத்திலும் இயங்கிய **சுய உணர்வு** மறுபடியும், இந்த பிரபஞ்ச பேருணர்வு மண்டலத்தில் போய்க் கலந்துவிடுகிறது.

இந்தக்காரணத்தால் நம் அனைவரின் பின்னாலும் இருந்து இயங்கும் '**நான்**' ஒரே '**நான்**'**தான்**. இந்த பிரபஞ்சம் முழுவதிலும் ஒரே ஒரு '**நான்**'**தான்** இருந்துக் கொண்டுள்ளது.

அந்த தன்னுணர்வை தனித்தறிய முடியாத நிலையில், ஜடப்பொருளாக உள்ள கல் போன்ற பாறையின் நிலையிலிருந்து மனிதன் வெகுதூரம் அறிவுப்படி நிலைகளில் முன்னேறி வந்து விட்டான். இருப்பினும், அவனாலும் தன்னுள்ளே உள்ள அந்த **முழுப்பிரக்ஞையை** முழுமையாக உணர்ந்துக்கொள்ள முடியவில்லை.

அதற்குக்காரணம், அவன் புறத்திலிருந்து ஏற்றி வைத்துக் கொண்ட ஏராளமான எண்ணங்களை "**அறிவு**" என்று கருக்கொண்டு, அந்த எண்ணங்களின் பிடியில் ஆழமாக சிக்கிக் கொண்டுள்ளான்.

அதாவது, **முழுப்பிரக்ஞை** இல்லாத நிலையில், நம்மை நாம் அறிய முடியாதவாறு, நம்முடைய ஆறாம் அறிவுக்கு கீழே உள்ள பல பரிமாண தளங்கள் நமக்குள்ளே இயங்கிக் கொண்டிருக்கின்றன.

அங்கே என்ன நடந்து கொண்டிருக்கிறது? என்பது, நமக்குப் புரிந்துக்கொள்ள முடியாதவாறு அறியாமைகள் சூழப்பட்ட சூழலில் மனம் சிக்கிக் கொண்டுள்ளதால், அந்த **பிரக்ஞையை (பேருணர்வை)** முழுமையாக உணர முடிவதில்லை.

அதேசமயம், பெரும்பாலான மனிதர்கள் ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களினால் உண்டான தெரிந்ததை வைத்துக் கொண்டு, அதிலே தெரியாத

விஷயங்களையும் தெரிந்ததுபோல் பாவனை செய்துக் கொண்டு, தவறான கருத்துகளின் மூலம், பல தவறான முடிவுகளை எடுப்பவர்களாகவே இருக்கிறார்கள்.

அவர்களுக்கு, **எனக்கு ஒன்றும் தெரியாது!** என்று ஒப்புக் கொள்ள முடிவதில்லை.

அதற்குக்காரணம், அவர்கள் ஏற்றி வைத்துக் கொண்ட அஹங்காரத்தின் வெளிப்பாடாக, நம் **தன்மானம்** என்ன ஆவது? என்று பயப்படுகிறார்கள்.

அதனால், அவர்கள் வாழ்க்கை மிகவும் சிக்கல் வாய்ந்ததாக மாறி விடுகிறது.

அதாவது, எனக்கு எதுவுமே ஒழுங்காகத் தெரியாது! என்பதையே, பலரும் தெரிந்து வைத்துக் கொள்ளாமல் இருக்கிறார்கள் என்றே கூற வேண்டும்.

ஒவ்வொரு மனிதர்களின் ஞாபகங்கள் என்று, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணப்பதிவுகள், அவர்களது ஆழ்மனதில் அப்படியே இருக்கின்றன.

அந்த சேகரிக்கப்பட்ட எண்ணங்களெல்லாம் கோப, தாபங்களாகவும், வன்முறைகளாகவும், விருப்பு, வெறுப்புகளாகவும், போட்டி, பொறாமைகளாகவும், சுயநலம், சுயப்பச்சாதாபங்களாகவும், சண்டை, சச்சரவுகளாகவும் ஆகி, ஏராளமான எதிர்மறை

உணர்ச்சிகள் நிறைந்த, **இருமை நிலையில்** இன்றைய மனிதர்கள் பெரும்பாலும் இருக்கிறார்கள்.

அவர்களது ஆழ்மனதில் என்ன நடந்துக் கொண்டிருக்கிறது? என்பதைப் பற்றிய தெளிவு எவருக்கும் இல்லை.

அவர்கள் விழித்துக் கொண்டிருக்கும்போது மட்டுமல்லாமல், தூக்கத்திலும் இந்த தீய எண்ண சக்திகள், கனவுகளாக அவர்களை அலைக்கழித்துத் துன்புறுத்துகின்றன.

இதுவரையில், இந்த மனித இனம் சந்தித்த பல்வேறு சரித்திரம் சார்ந்த சங்கடங்கள் எல்லாவற்றிலும், மனிதன் தனக்கு அனுபவம் கொண்ட உணர்ச்சிகளாக **பயம், வன்முறை, அதிர்ச்சிகள், சிக்கல்கள்** போன்றவைகளை பிரக்ஞையின் அடித்தளத்தில், ஆழ் மனதில் இன்னும் தொடர்ந்து அழுத்தி வைத்துக் கொண்டிருக்கிறான்.

அவனது, அந்த ஆழ்மன இருளிலுள்ள **உயிர்** மட்டும் உள்ளே துடித்துக் கொண்டிருக்கிறது.

அந்த உயிருணர்வின் உதவியால், மனமாக வெளிப்படும் வெவ்வேறான **எதிர்மறை உணர்ச்சிகள்** அவனது உறவுகளைச் சீர்குலைக்கின்றன.

என்ன செய்வது? என்று அவனுக்குத் தெரிவதில்லை.

அந்தச் சக்திகளோடு போர் புரிந்து அவன் நிச்சயமாக வெற்றியை அடைய முடியாது.

அவனைவிட அவைகள் அதிகம் சக்தி வாய்ந்தவைகள் என்பதினால், அவன் அந்த **அடிமன இருளை** வென்று, அதைக் கடந்து, **உள்ளொளி** பெற்று, தெளிவுடன் வாழ வேண்டுமானால், அதற்கான சில அடிப்படை விஷயங்களை மனிதனாகப் பிறந்த நாம் ஒவ்வொருவரும் அவசியம் அறிந்துக் கொண்டாக வேண்டும்.

நாம் சாதாரண ஒரு அறிவு தாவரமாக பிறந்திருந்தால், **தொடுணர்வு** என்ற ஒன்றை மட்டும் கொண்டவர்களாக, அப்படியே நின்ற இடத்தில் நின்றுக் கொண்டிருப்போம்.

அவ்வாறே, இரு அறிவு, மூன்று அறிவு என ஐந்து அறிவுக்கு உட்பட்ட அனேக உயிரினங்களும், தங்களது புலனறிவுகளுக்கு ஏற்ப இருந்துக் கொண்டிருக்கின்றன.

ஆனால், இதில், மனிதர்களாகிய நாம் மட்டும், மகத்தான **ஆறாம் அறிவு** கொண்டு பிறந்துள்ள காரணத்தினால், நம்முடைய **ப்ரக்ஞை** நம்மிடம் உள்ள சிறப்பான பகுத்தறிவின் மூலம் பிரகாசித்துக்கொண்டு

இருப்பதை உணரக்கூடிய வகையில் உள்ளவர்கள் மட்டுமே, நம்மை நாம் யார்? என்று விசாரித்து அறிய ஆசைப்படுகிறோம்.

அத்துடன், இந்த அகண்ட பிரம்மாண்ட பேரண்டத்தைக் கண்டு, பிரமித்துப் போய் அதைப் பற்றி அறியவும் ஆர்வமும் கொள்கிறோம்.

இது ஏன்? என்று என்றாவது யோசித்துப் பார்த்திருக்கிறோமா?

காரணம், இந்த அகண்ட, பிரமாண்ட பேரண்டம் **உயிருள்ளது, உணர்வுள்ளது, அறிவுள்ளது** என்பதினால், இதன் பேருணர்வு தாக்கம், இதே பிரபஞ்சத்தில் உள்ள ஐந்தறிவுக்கு அப்பாற்பட்டு, அறிவுப்பரிமாணத்தில் உயர் பரிமாணத்திற்கு வந்த உயிரினமான மனிதனுக்கு மட்டும் **தன்னுணர்வாக** வெளிப்பட்டு தன்னை அறியும் ஆர்வத்தை உண்டாக்குகிறது.

இதுவே, ஆறறிவுக்கு உட்பட்ட மற்ற உயிரினங்கள் இந்த **பிரபஞ்ச பேருணர்வை** உணர முடியாத நிலையில் உள்ளதினால், அவைகள் தன்னை யார்? என்று அறிந்துக் கொள்வதில் ஆர்வம் காட்டுவதில்லை.

இதே அறியாமை நிலை, நம்மிடையே காணப்படும் அனேக மனிதர்களுக்கும் உள்ளது.

அதற்குக்காரணம், அவர்களது **மனம்** அனேக **குப்பைகளை** உள்ளடக்கியவாறு உள்ளதினால், அவர்கள் உள்ளத்திலே, இந்த **பிரபஞ்சபேருணர்வு** பிரகாசிப்பதில்லை.

அத்தகைய அறியாமை மனிதர்கள் இந்த **பிரபஞ்ச பேருணர்வு** பரிமாணத்தில், இன்னும் கீழ் நிலையில் உள்ளார்கள் என்றே கூறலாம்.

அதாவது, இந்த **பிரபஞ்ச பேருணர்வின்** பரிமாணங்களில் மேலே, மேலே உயர் தளங்களுக்குச் செல்லச் செல்ல தனி மனித மனதின் கட்டுப்பாடுகள் குறைந்துகொண்டே வருகின்றன.

அவனது **சுதந்திரமும், அறிவுணர்வும்** அதிகரிக்கிறது.

அதுவே, அறியாமையில் வாழுகின்ற மனிதன் தன் மனதினால் ஏற்றி வைத்துக் கொண்ட ஏராளமான எண்ணங்கள் என்ற குப்பைகளினால், அந்த பேருணர்வுப் பிரகாசத்தை உள்ளுணர்ந்து, வெளிப்படுத்த முடியாமல், அந்த பிரபஞ்ச பேருணர்வின் பரிமாணத்தில் இருந்து கீழே செல்லச் செல்ல, அவனது மனம் கட்டுப்பாடுகள் கொண்டதாக மாறி, தனக்கென வரையறுக்கப்பட்ட '**நான் இன்னார்**' என்ற ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களின் அடிப்படையில் அமைந்த, வாழ்க்கையை வாழ ஆசைப்படுகிறது.

இவ்வாறு, மற்றவர்களால் வடிவமைத்துக் கொண்ட ‘**நான் இன்னார்**’ என்ற தன் சொரூபத்தை உண்மை எனக் கருதிக்கொண்டு, அதன் வாயிலாக மேல் நிலையிலிருந்து கீழ்நிலை பரிமாணத்திற்கு மேலும், மேலும் இறங்கி வருவதினால், அவனுக்கு சந்தோஷம் இல்லாமல், **துக்கம் நிறைந்த வாழ்க்கையை** வாழவேண்டிய கட்டாயம் உண்டாகிறது.

மேலும், இதுப்போன்ற துயரங்களின் பிடியில் சிக்கிய மனிதர்கள், அந்த பேருணர்வு பரிமாணத்தில் இருந்து, இன்னும் சில தளங்கள் கீழே இறங்கி, இழிவான பிறப்பாகிய **மிருகங்கள், பறவைகள், பாம்பு, பல்லிகள், புழு, பூச்சிகள்** எனவும், அதையும் விட அப்படியே நகர முடியாமல் நிற்கின்ற, ஒரு அறிவு கொண்ட தாவரங்களாகக் கூட பிறக்க வேண்டிய கட்டாயத்திற்கு தள்ளப்படுகிறார்கள்.

இவ்வாறு தோன்றிய படைப்பின் பல்வேறு அறிவு நிலைகளில், தற்பொழுது, நாம் நம் புலன்களால் காணுகின்ற இந்த **பிரபஞ்சம்** படைப்பின் **நான்காவது நிலை** எனலாம்.

அதாவது, இந்த பிரபஞ்சம் படைக்க காரணமாக இருந்த நான்கு நிலைப்பாடுகளில் இதுவே கடைசியாக உள்ள நான்காவது நிலை ஆகும்.

இதற்கு முன்னால் **மூன்று நிலைகள்** உள்ளன.

**முதல் கட்டம் பரம்**. இது படைப்பாற்றலின் உள்ளார்ந்த நிலை. இந்தக் கட்டத்தில் எதுவும் கிடையாது. எந்த விதமான அசைவும் கிடையாது. அனைத்தும் **அகவயமாக** இருக்கிறது.

**இரண்டாவது கட்டம் பஸ்யந்தி**. இது ஒளி விழித்துக் கொள்ளும் நிலை என்று சொல்லலாம். பார்வையின் தொடக்கம். **சுத்தப் பிரக்ஞை நிலை.**

**மூன்றாவது கட்டம் மத்யமம்.** இந்தக் கட்டத்தில் உள்ளொளி புத்தி என்னும் மையத்தில் குவிகிறது. **அறிதல்** என்பது இப்போதுதான் சாத்தியமாகிறது.

**நான்காவது கட்டம்** **வைகரி**. இந்தக் கட்டத்தில்தான் படைப்பு வெளிப்படையாகிறது. புலன்களால் அறிய முடிவதாகிறது. நாம் உலகம், பிரபஞ்சம் என்று அழைக்கும் அமைப்பு உருவாகிறது. **அனுபவம் தோன்றுகிறது.**

இதை, ஒரு தாவத்தின் மூலம் விளங்கிக் கொள்ளலாம்.

அதாவது, முதற்கட்டம் வெளித் தெரியாத வேர். இதை "**அவ்யக்தம்**" என்று சாஸ்திரம் கூறுகின்றது. இரண்டாவது கட்டம் வளர்ந்து மேலெழும் தண்டு. இதை "**வியக்தம்**" என்று சாஸ்திரம் அழைக்கின்றது. மூன்றாவது

கட்டம் மலர்ந்து விரியும் பூக்கள். நான்காவது கடைசிக் கட்டம் பழுத்த கனி.

அதில், மூல உணர்வு நிலையை **முதல் தளம்** என்று கொள்ளலாம்.

இது **ஆதி நிலை.** அந்த நிலையில் பேருணர்வு பிரகாசிக்கும் வெட்ட வெளியில், பொருள் ஏதும் கிடையாது.

அந்த தூய **பரமாகாசத்தின்** விரிவு நிலையில், இந்த பிரபஞ்சம் உண்டாவதற்கு முந்தைய நிலையில், எதுவுமே தோன்றாத நிலையில், அதாவது, **பிறப்பு - இறப்புக்கு** முந்தைய நிலையில், நானும் இல்லை, மற்றவர்களும் இல்லை, மற்றவைகளும் இல்லை.

அங்கு காண்பவனும் இல்லை, காட்சியும் இல்லை. இதுவே, **மௌனம், இருப்பு, ப்ரஹ்மம், இறைவன்** என்று அழைக்கப்படுகிறது.

அடுத்தது, **இரண்டாம் தளம்** என்பதில், அந்த பேருணர்வு பிரகாசிக்கத் தொடங்கும் போது, இந்த அகண்டப் பிரக்ஞையில் (பிரபஞ்சப் பேருணர்வில்) உணரப்பட்ட பொழுது, **'நான் - நீ'** என்று முதல் கட்டப் பிரிவு உண்டாகிறது.

அங்கே, **காண்பவனும், காட்சியும்** தோன்றுகிறது.

ஆனால் இந்த '**நான்**' தனி ஆள் இல்லை. அது பிரபஞ்சமாக, **பிரபஞ்ச மனமாக** பேருணர்வுப் பிரகாசமாக வெளிப்படுகிறது.

அந்த நிலையில் உருவாகும், அண்ட சராசரங்களை **படைத்து, காத்து, அழித்து** கொள்கின்ற **பிரபஞ்சமனமே,** முத்தொழில் புரிகின்ற '**ஈஸ்வரன்**' என்று சாஸ்திரம் அழைக்கிறது.

அந்த **பிரபஞ்சமனம்** மாற்றத்திற்கு உட்பட்டுக் கொண்டே இருப்பதின் காரணமாக, இந்த **பிரபஞ்சம்** விரிந்துக் கொண்டே போகிறது.

அதனால், அதில் தோன்றும் அண்ட சராசர உடல்கள் எல்லாமே வந்து போவதினால், அதை, '**மாயை**' என்றும் கூறப்படுகிறது.

அவ்வாறே, **மூன்றாவது தளம்** தனிச்சுய உணர்வு.

இதில் '**நான்**' என்ற **தன்னுணர்வு**, ஒரு **தனி உயிராக** உருக்கொள்கிறது.

அதாவது, '**நான்**' அனுபவம் கொள்கிறேன் என்று, பிரபஞ்சம் **தன்னையுணர்ந்த நிலை** எனலாம்.

அதனால், அந்த பிரபஞ்சத்தின் தனித்த தன்னுணர்வாகிய "**நான்**", தன்னை தனியான **ஒரு சீவன்** என்று எண்ணிக் கொள்கிறது.

அதன் காரணமாக, பிரபஞ்சம் தன்னை பிரித்துப் பார்க்கின்ற தனித்த நிலையில், தனித்தனி உடல்களாக உண்டாக்கிக் கொள்கிறது. அத்துடன் தன்னையும், உலகையும் வேறு, வேறாகப் பிரித்துப் பார்க்கின்ற இருமைகளில் சிக்கிக் கொள்கிறது.

அடுத்து, **நான்காவது தளம்** என்பதில் சீவன் தன்னையும், உலகத்தையும் பிரித்துக் கொண்டதினால் உண்டான, இரண்டுக்கும் உள்ள இடைவெளியின் காரணமாக, அங்கு '**காலம்**' உருவாகிறது.

அந்த காலத்தின் மூலம், தனித்தனியாக பிரிக்கப்பட்ட உணர்வு, உண்மையான பேருணர்வின் ஒருங்கிணைந்த நிலைக்கு மீண்டும் திரும்ப முயற்சிக்கிறது. காலத்தை வெல்லப் பார்க்கிறது.

அதன்காரணமாக, பிரிந்தவைகள் ஒன்றையொன்று ஈர்க்கத் தொடங்குவதால், ஒன்று மற்றொன்றை அடைய முயற்சிக்கிறது. அந்த அடைய முயலும் முயற்சியினால், அவைகள் இயங்க ஆரம்பிக்கின்றன. அந்த இயக்கம் காலத்தின் ஓட்டமாகக் கணிக்கப்படுகிறது.

இந்த **காலம்** என்பதை, அனைவருக்கும் பொதுவான, புறவயமான, இந்த உலகத்தில் இருப்புடைய ஒரு விஷயமாகக் கருதுகிறோம்.

அதாவது, **காலம்** என்பது இன்னும் தொடங்க வில்லை என்றால், அது, எதிர்காலத்தில் இருக்கிறது. அதுவே, தொடங்கிவிட்டால், இப்போது நிகழ்காலத்தில் நிகழ்ந்துக் கொண்டிருக்கிறது. அதுவும் அந்த விநாடி கடந்து போய் விட்டது என்றால், அது, கடந்த காலத்தில் அல்லது இறந்த காலத்தில் இருக்கிறது என்கிறோம்.

இதில், **கடந்தது - இருப்பது - வருவது** ஆகிய மூன்றும், ஒருங்கே ஒரே நேரத்தில் '**இருப்பது**'தான் "**காலம்**" எனப்படுகிறது.

இதிலிருந்து ஒரு உண்மை விளங்குகிறது.

அதாவது, காலமற்றது எதுவோ? அதுவே, தன்னை காலமாக வெளிப்படுத்திக் கொள்கிறது.

**காலம்** என்பது நகர்வது.

ஆனால், நகராத **ஒன்றின்** பின்னணியில்தான் நகர்வை மனம் உணர முடியும்.

இதிலிருந்து, காலமற்றது எதுவோ, அது அசைவற்றது.

அந்த அசைவில்லாத **ஒன்றின்** பின்னணியின், முன்னால் அசைவது எதுவோ, அதுவே **காலம்** எனப்படுகிறது.

அதாவது, **உணர்வுவெளி** மட்டும்தான் ‘**உள்ளது**’.

அது எதனுடனும் சம்பந்தப்படாதது. அதன் சுயத் தன்மையில் **பொருள்** எதுவும் இல்லை. அங்கு எதுவும் நடக்கவில்லை. அதனால், **காலம்** என்பது இல்லை.

உண்மையில் ‘**இப்போது**’ என்பது மட்டும்தான் எப்போதும் இருக்கிறது.

‘**இப்போதில்**’ இருந்து கொண்டுதான் மனம் இறந்தகாலம் பற்றி ‘**நினைக்கிறது**’. எதிர்காலம் பற்றிக் ‘**கற்பனை**’ செய்கிறது.

**காலம்** என்பது நினைவுகள் சார்ந்த மனதில்தான் இருக்கிறது.

அவ்வாறு காலமாக நிற்கும் மனம், உணர்வு வெளியில் காலமற்று மிதக்கிறது. இல்லாத **காலம்** இருப்பதாகத் தெரிவதுதான் காலத்தின் **மாயை.**

இதிலே, உலகம் என்னும் அனுபவம் தனி மனதில் நிகழவில்லை.

தனித்தனியான மனங்கள் வேர் கொண்டிருக்கும், கூட்டு மனதில் அது நிர்மானிக்கப்படுகிறது.

எல்லா அனுபவங்களும் - உலகங்களும் - கூட்டுப் பிரக்ஞையில்தான் நிற்கின்றன. அதனால்தான், தனி மனதின் பார்வையில், இந்த உலகத்துக்குச் **சுய இருப்பு** இருப்பதாகத் தோன்றுகிறது.

அதேசமயம், அதன் அனுபவம் **எல்லையற்ற உணர்வு வெளியில்** நிகழ்கிறது.

**காலம்** - **இடம்** இரண்டும் அனுபவக் கட்டமைப்பின் அம்சங்கள். அவைகள் தன்னளவிலான சுய அனுபவங்கள் இல்லை.

அதிலே, அனுபவம் என்பது, உணர்வு வெளிக்குள்ளேயே தொடங்கி, அதே உணர்வு வெளிக்கு உள்ளேயே அடங்கிவிடும் தன்மை கொண்டதினால், உணர்வெளிக்குக் **கால** - **வெளி** எல்லைகள் கிடையாது.

அதனால், **உணர்வு** **வெளி** தொடக்கமும் முடிவுமற்று, எல்லைகள் ஏதுமற்று எப்பொழுதும் ‘**இருப்பு**’ கொண்டுள்ளது.

**ஐந்தாவது** **தளம்** என்பதில்தான், ஆசைகளை வெளிப்படுத்த வேண்டி, **தனிமனம்** உருக்கொள்கிறது.

தனியொரு மனதின் மூலம்தான், தனி மனிதனின் நினைவுப் பதிவுகள், சிந்தனைகள், எண்ண உருவங்கள், கருத்துக்கள், மனபிம்பங்கள் போன்றவை ஏற்படுகின்றன.

இதுதான், '**மனம்**' என்று கூறும் தளம்.

இதில்தான் தனிமனித ஆளுமை, அஹங்காரம் எல்லாம் உண்டாகிறது.

உலகத்தில் உள்ள மற்றவர்களுடன் தொடர்பு கொள்ளும், உறவு கொள்ளும் தனி நபராக இந்த தனிமனம் உருவாகிறது.

**ஆறாவது தளம்** என்பது, உணர்வினால் உண்டான உணர்ச்சிகள் என்ற மனதின் போராட்டம் தொடங்கும் தளம். இத்தளத்தில், மனம் தன் உணர்ச்சிகளைக் கட்டுப்படுத்த விழைகிறது.

ஆனால், உணர்ச்சிகள் மனதையும் மீறி, அதன் கட்டுப்பாட்டில் இல்லாமல் கொண்டு போகின்றன. அத்துடன், பேருணர்வின் வெளிப்பாடான ஆழ்மனச் சக்திகள் என்ற மன உணர்ச்சிகளின் கட்டுப்பாடற்ற இயங்கத்தினால், மனம் தன் ஆசைகளை **அனுபவம்** ஆக்க விரும்புகிறது. எனவே, அதற்கான வாழ்க்கை, வாழ்விடம், சூழ்நிலைகள், சுற்றத்தார் என எல்லாவற்றையும் உருவாக்கிக் கொள்கிறது.

கடைசியில் **ஏழாவது தளம்** என்பதில், நம் பௌதிக உடல் இயங்கி நடமாடும், பௌதிக உலகத்தை மனம் படைத்துக் கொள்கிறது.

அந்த உலகத்தை தான் உண்டாக்கிய உடல்களில் உள்ள புலன்களால் உணருகிறது.

அத்துடன் அந்த புலன் அறிவுக்கு உட்பட்ட மனமாக மாற்றமடைகிறது.

அதன் காரணமாகத்தான், ஆழ்மனப் பதிவுகளில் சேகரித்து வைத்துக் கொண்டுள்ள உணர்ச்சிகளை எல்லாம், தன்னால் உண்டாக்கிக் கொண்ட பௌதீக உடலின் மூலம் (ஸ்தூல பருஉடலின் மூலம்), அனுபவத்திற்கு கொண்டு வருகிறது.

எனவே, நம் **உணர்வுநிலை** அல்லது **பிரபஞ்சம்**, பல பரிமாணத் தளங்களைக் கொண்டது.

ஒவ்வொரு தளத்திலும் அதற்கேற்ப வெவ்வேறு **சக்திகள்** இயக்கம் கொள்கின்றன.

அதில் உயர்ந்த தளத்தில் இருப்பவருக்கு, அதற்குக் கீழே உள்ள தளங்களில் நடப்பது என்னவென்று தெளிவாகத் தெரியும்.

இந்த பரிமாண தளங்கள் எல்லாம் பிரக்ஞையின் படிப்படியான வெளிப்படுதல்தான்.

இதன்படி **பிரக்ஞை** அல்லது **பேருணர்வு** என்பது கால, தேசத்துக்கு அப்பாற்பட்டது.

அது முதலும், முடிவும் அற்றது.

அநாதியானது.

இந்தப் பிரபஞ்சத்திற்கே ஆதாரமானது.

பிரபஞ்சம் அழிந்த பின்பும் தான் மட்டும் அழியாமல் நிற்கக்கூடியது.

இதிலே, எந்த மனிதனுடைய **மனம்** தன்னைத் தானே விசாரித்து, விவேகத்தை அடைகின்றதோ, அந்த மனமே, இந்த பரிமாண படித்தளங்களில் இருந்து கீழிறங்கிய நிலையிலிருந்து, மீண்டும் படிப்படியாக மேலே, மேலே பல பரிமாண தளங்களுக்கு முன்னேறி, மீண்டும் **தன் மூலத்திற்கு** திரும்ப முடிகிறது.

ஆக, பல பரிமாணங்களும், பல தளங்களும் கொண்ட இந்தப்பிரபஞ்சத்தின் எல்லாப்பரிமாணங்களிலும் மனிதனாகப் பிறந்த நாம் மட்டுமே, நமக்கு கிடைத்துள்ள ஆறாம் அறிவாகிய நன்மை, தீமைகளைப் பகுத்தறியக்

கூடிய பகுத்தறிவைக் கொண்டு, பயனுள்ள பிறவியாக இதை மாற்றிக் கொள்ள முடியும்.

இதிலே, மற்ற உயிரினங்களுக்கு கிடைக்காத உன்னத புலன்களான ஐம்புலன்களுக்கு அப்பாற்பட்டு, ஆறாம் அறிவாக நமக்கு கிடைத்துள்ள **ஆக்க சக்தி** என்ற புத்தி சக்தியைக் கொண்டு, நன்மை, தீமைகளை பிரித்தறியும் வல்லமை யாருக்கு உண்டாகிறதோ, அவனே **மனிதப் பிறவியின் மகத்துவம் அறிந்தவன்** என்கின்றனர் நமது ரிஷிமுனிவர்கள்.

ஆகவே, அந்த ஆக்க சக்தியை வளர்த்துக் கொள்வதற்கு **தியானம்** மிகவும் அவசியம்.

தியானம் என்றவுடன், எதையோ நினைத்துக் கொண்டு, ஒரு இடத்தில் சும்மா உட்கார்ந்துக் கொண்டு செய்யும் பயிற்சி என்று கருதி விடக்கூடாது.

ஒன்றும் செய்யாமல், எப்பொழுதும் அந்த உணர்வுடன் ஒன்றியவாறு, உள்ளே உள்ளுணர்வில் கவனத்துடன் '**இருக்க**' நாம் பயிலவேண்டியதே ‘**தியானம்**’ ஆகும்.

அப்படி **'இருக்கும்போது'** ஆக்க சக்தி என்ற புத்தி சக்தி தானாக பெருகுகிறது.

அப்படிப்பெருகும் சக்தியை நாம் நம்முடைய சுய நலத்திற்காக பயன்படுத்தாமல், இந்த சமுதாயத்திற்காக **பிரபஞ்ச சங்கல்பம்** என்பதாகக் கொண்டு, நல்ல விசயத்திற்கு பயன் படுத்தும்போது, நம் வழியாக அனேக நன்மைகள் இந்த சமுதாயத்திற்கு நடக்கத் தொடங்கிவிடும்.

அதுதான் **நம் பிறப்பின் உண்மையான பயன்** என்றும் கூறலாம்.

இந்த பிரபஞ்ச பேருணர்வின் பரிமாண தளங்களில் மனிதன் என்ற உயிரினம் மட்டுமே, தனக்கு வாய்த்துள்ள **மனம்** என்ற மகத்தான சாதனத்தைக் கொண்டு, அதிலே, புத்தியில் தேவையற்று, ஏற்றி வைத்துக் கொண்டுள்ள எண்ணங்களை எல்லாம் விசாரணை செய்து, அவைகளை அந்த மனதிலிருந்து நீக்கி, மகத்தான மெய்ப்பொருளை அறியும் பாதையில் பயணிப்பதற்காக கிடைத்த, இந்த மனித தேகத்தைக் கொண்டு, இனி தேகம் கிடைக்காத நிலையாகிய உயர் பரிமாணத்திற்குச் சென்றவர்களைத்தான் **தேவர்கள்** என்று நம்மால் அழைக்கப்படுபவர்கள்.

இந்த தேவர்கள் என்பவர்கள் பிரபஞ்சத்தின் உயர் பரிமாணத்தில் இருந்துக் கொண்டு, அதன் வாயிலாக கிடைக்கின்ற சில சுக, போகங்களை அனுபவிப்பதாக நாம் நினைத்துக் கொண்டிருக்கிறோம்.

ஆனால், உண்மை அப்படி அல்ல.

தேவர்களாக இருப்பவர்கள் மனித தேகத்தில் இருந்த பொழுது, தங்கள் மனதை விசாரித்து, அதன் வாயிலாக விவேகத்தை அடைந்து, அந்த மனித உடலில் இருக்கும் பொழுதே, உடல் அபிமானம் அற்று, அந்த பேருணர்வு அனுபவத்தில் அனுதினமும் திளைத்து, அதன் வாயிலாக இந்த ஸ்தூல உடலாகிய மனித உடலை பூமியிலேயே விட்டு, விட்டு, உடலற்ற சூக்கும நிலையில், பேருணர்வு பரிமாணத்தின் மேல்தளங்களில் எளிதாக நுழையக்கூடிய தகுதியை உடைய **மனங்களையே** நாம் **தேவர்கள்** என்கிறோம்.

அவர்கள் இந்த **பிரபஞ்ச பேருணர்வின்** பேரானந்தத்தில் சில துளிகளை மட்டுமே பருகுகிய மனங்களை **தேவர்கள்** எனலாம்.

அவர்களது அந்த நிலையையும் தாண்டும், உயர் பரிமாணங்கள் இந்த பிரபஞ்சத்தில் நிறைய உள்ளன. அதனால்தான், தேவர்கள்கூட அந்த ப்ரஹ்மத்திற்கு கீழானவர்கள் என்று கூறப்படுகிறது.

ஆகவே, ஸ்தூல உடலற்ற கண்களுக்குப் புலனாகாத சுக்கும உடல் கொண்ட மனங்கள் (தேவர்கள்) அனுபவிக்கும் சுகம் என்பது, நாம் ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களின் அடிப்படையில் நினைத்துக் கொண்டிருப்பதுப் போன்று, ரம்பா,

ஊர்வசியுடன் உறவு கொள்ளும், உடல் சார்ந்த சுகம் அல்ல.

உண்மையில் தேவர்கள் (உயர் மனங்கள்) அனுபவிக்கும் சுகம் என்பது, அந்த பேருணர்வு பரிமாணத்தில் வருகின்ற, உயர் பரிமாணமான மேல் தளத்தில் உள்ள ப்ரஹ்மானந்தத்தின் **சில துளிகள்** என்றே கூறலாம்.

இதை அறிந்துக்கொண்ட மணிவாசகப் பெருமான் தமது பாடலின் வாயிலாக, தனக்கு கிடைத்த பல்வேறு பிறவிகள் மூலம் உண்டாகிய உடல்களில், ஒரு அறிவு முதல் ஆறு அறிவு வரை உள்ள அறிவுப் பரிமாணத்தில், ஒவ்வொன்றாகக் கடந்து மேலே, மேலே வந்த எனக்கு, இந்த மனிதப்பிறவி மூலம், அந்த அகண்ட பிரபஞ்ச பேரறிவை, அதாவது, **பேருணர்வை** அறிந்து, உணர்ந்துக்கொள்ள முடிந்ததினால், **புல்லாகிப் பூடாய்ப் புழுவாய் மரமாகிப்** பல்வேறு பிறவிகளால் சலிப்படைந்து விட்டேன். போதும் இந்த பிறவிகள் என்று பாட முடிந்தது.

அதாவது, பல்வேறு பிறவிகளில் பல உடல்கள் நமக்கு கிடைத்தும், இறைவ(தன்)னை அறிய முடியாத அவல நிலையில் இருந்ததற்குக் காரணம், அவைகள் அறிவில் குறைவான உடல்கள் என்பதினால், போதுமான புலன்கள் இல்லாததினால், இறைவ(தன்)னை அறிய முடியவில்லை.

ஆனால், இந்த மனித தேகம் **ஐம்புலன்கள்** கொண்டதாக இருப்பதாலும், **ஆறாம் அறிவு** என்ற மனதைக் கொண்டதாலும், அந்த இறைவனை அறிந்துக் கொள்ள முடியுமா? என்றால், அது, அந்த மனதில் ஏற்றி வைத்துக் கொண்ட எண்ணங்களில் இருந்து விடுவித்துக் கொண்டு**, சும்மாயிருக்கிற** நிலை என்று கூறப்படுகின்றது.

**மனதின் சும்மா இருக்கும்** நிலை என்பது, அதே மனதைக் கொண்டு, அதன் அறியாமைகளை அகற்றி, அந்த அறிவை அதற்குக் காட்டிக் கொடுத்துவிட்டால், அந்த மனம் தன்னை அறிவாக உணர்ந்துக் கொண்டு, ஆனந்தம் அடையும் நிலையைத்தான் **ப்ரஹ்மானந்த** நிலை அல்லது **சும்மா இருக்கும்** நிலை எனப்படுகின்றது.

அதற்கான ஒரே வழி, அறியாமையாக ஏற்றி வைத்துக்கொண்ட ஏராளமான எண்ணங்களை விசாரித்து, தேவையற்ற விசய, சுகங்களான இருமைகளைத் துறப்பதே, அந்த மனதை தூய்மைப்படுத்துகின்ற துரிதமான செயல் எனலாம்.

இதை மனதின் “**விசாரம்**” என்று அழைக்கலாம்.

இத்தகைய மனதின் தீவிர விசாரத்தன்மையினால், அறியாமைகள் அகன்று, அந்த அறிவாகவே “**நான் இருக்கிறேன்**” என்று **தன்சுயத்தை** உணர்ந்துக் கொள்வதே உண்மையில் **ஆனந்தம்** என்று அறியப்பட வேண்டும்.

ஏன் எனெனில், அந்த இறைவன் என்று நாம் நினைத்துக் கொண்டிருப்பவன் உண்மையில் பேருணர்வு மயமானவன் என்பதினால், அவனை **நிர்குணம்** என்றே சாஸ்திரம் அழைக்கிறது.

நிர்குண ப்ரஹ்மத்திற்கு உடலோ, குணங்களோ, மலங்களோ எதுவுமே கிடையாது. அத்துடன் அவன் (அறிவு) எதனுடனும் சங்கமம் ஆகாதவன். அப்படிப்பட்டவன் தன்னை வெளிப்படுத்திக்கொண்டது எப்படியெனில், தன்னில் தானாய், **தன்னுணர்வில்** மட்டுமே தன்னையறிவதாக வெளிப்படுத்திக்கொண்டான்.

ஆக, அவன் தன்னுணர்வாகிய தன்பேருணர்வை, உணர வேண்டுமானால், "**நான் இருக்கிறேன்**" என்றே உணர்ந்துக்கொள்ள முடியும்.

அதன் அடிப்படையில்தான் இந்த மொத்த பிரபஞ்சமும் உண்டாகியுள்ளது.

அதாவது, இந்த பிரபஞ்சம் இறைவனின் அகத்தில் உண்டாகி, அதே அகத்தில் அடங்கி விடுகிறது.

அதைத்தான் நாம் **பிரளயம்** என்கிறோம்.

அதாவது, இந்த மொத்த பிரபஞ்சமும் மறைந்து போவதை **மஹாபிரளயம்** என்று சாஸ்திரம் அழைக்கிறது.

அந்த பிரளயத்தின்போது, அந்த இறைவனின் அகத்தில் இந்த மொத்த பிரபஞ்சமும் அடங்கிய நிலையில், எஞ்சி நிற்பது எது என்றால், அந்த இறைவனும், அவனது தியானத்தில் வெளிப்பட்ட ஓங்காரமும்தான்.

அதைத்தான் மணிவாசகப் பெருமான் **என் உள்ளத்துள் ஓங்காரமாய் நின்ற** என்று பாடுகிறார்.

தற்போதைய மனிதனிடம் உள்ள **பிரக்ஞை** (உணர்வு) இன்னும் **தன் சுயநிலையை** உணரவில்லை என்றே கூறலாம்.

அதாவது, மனிதனிடம் காணப்படும் **பிரக்ஞை** இப்போதிருக்கும் நிலையில், பெருமளவுக்கு இன்னும் மனதின் பிம்பங்களைச் சார்ந்துதான் இயங்குகிறது.

**தூயப்பிரக்ஞை** என்பதை, இன்னும் நம்மில் பெரும்பாலானவர்கள் அறிய முடியாத ஒன்றாகத்தான் அனேகமாக இன்றுவரை இருக்கிறது.

**பிரக்ஞை** மனதின் ஏற்றி வைக்கப்பட்ட எண்ணங்களின் ஆதிக்கத்திலிருந்து விடுபட்டு, தனக்குள் தானே விழித்துக்கொள்ளும் போதுதான், அதன் உண்மைத் தன்மையை உணர்கிறது.

அதுவரை மேகங்களால் மறைக்கப்பட்ட சூரியன் போன்று பிரகாசிக்க முடியாமல் இருக்கிறது.

அதாவது, ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களால் உண்டான மனதின் ஆதிக்கத்தில் இருந்து அது விழித்துக்கொள்ளும்போது மட்டுமே, மனிதன் **பிரபஞ்ச பிரக்ஞையின்** பரிமாண தளங்களின் மேல் நிலையை நோக்கி முன்னேறுகிறான்.

புதியதொரு **உயர் அறிவுத்தளத்தை** அடைகிறான்.

அதாவது, ஒரு அறிவு முதல் ஆறு அறிவு வரை படிப்படியாக முன்னேறிய நிலையில், இந்த ஆறாம் அறிவுப் பரிமாணத்தினைக்கொண்டு, தன்னை அறிய ஆவல் கொண்டால், அதைவிட உயர் அறிவுப் பரிமாணத்துடன் கூடிய உன்னத உணர்வுத்தளத்தில், அவனுடைய பிரக்ஞையும், பார்வையும் புதிய ஆற்றலை அடைகின்றன. அதை **ஏழாம் அறிவு** என்றும் கூறலாம்.

இதனால், இவனிடம் இன்னும் விழிப்புக் கொள்ளாத நிலையிலிருக்கும், பல புதிய சக்திகள் மற்றும் சித்துக்கள் அவனுக்கு வந்து சேர்கின்றன.

அப்பொழுதுதான், '**நான்**' என்னும் தன்னுணர்வு, பிரக்ஞையின் அடிப்படைத் தன்மையாக இருப்பதால், தூயப்பிரக்ஞை நிலையில்தான், அவனது சுத்தப் பிரக்ஞையான '**நான்**' உணர்வு நிலைத்து நிற்க முடியும்.

இந்த நிலைதான், பிரபஞ்சம் தன்னைத்தானே உணர்ந்துக் கொண்ட முதல் **சுயவுணர்வு நிலை** என்றும் கூறலாம்.

பிரபஞ்சம் நம் அனைவரின் வழியாகவும் படிப்படியாகத் தன்னைத் தானே உணர்ந்து கொள்கிறது.

அதாவது, படைக்கப்பட்ட உயிரினங்களின் பரிணாம வளர்ச்சியும், அவைகளுக்கு கிடைத்துள்ள அறிவாற்றலின் பரிமாணமும் படிப்படியாக முன்னேறியதின் அர்த்தம் இதுதான்.

நம்முடைய உயர் வாழ்க்கை என்னும், இந்த ஜாலம் மிகுந்த அனுபவத்தின் அடிப்படைப் பயனே, **நாம் இந்தப் பிரபஞ்சம்தான்** என்னும் உயரிய உண்மையை நேரடியாக உணர்ந்துக் கொள்வதுதான்.

அத்தகைய, அந்த எல்லையில்லா பிரபஞ்ச பேருணர்வு, அதன் எல்லைக்குள் இருக்கும் இந்த உடலில் உள்ளுணர்வாக உணர முடியும். அதைத்தான் நம் சித்தர் பெருமக்கள் “**அண்டத்தில் உள்ளது, பிண்டத்தில் உள்ளது**” என்றனர்.

இந்த சித்தர்கள் கூறியதின் உள்ளார்ந்த கருத்து என்னவெனில், நம் உடலிலும், மனத்திலும் இயங்கும் **பிரபஞ்சப் பிரக்ஞை** (உள்ளுணர்வு) நம்மை நமக்கு ‘**நான்**' என்று அடையாளம் காட்டுகிறது.

அதேப்போன்று, இந்த அகண்ட பிரபஞ்சப் பிரக்ஞையான **பேருணர்வு** என்ற ‘**நான்**' தன்னை என்னவாகக் காண்கிறது?

இந்த மாபெரும் பிரபஞ்சத்தை, அதாவது இந்த விஸ்வத்தை (பிரபஞ்சத்தை) தன் உடலாகத்தான் அது காண முடியும்.

அதாவது, தன் ரூபத்தை அது விஸ்வரூபமாகத்தானே காண முடியும்?

ஆக, நம் ஒவ்வொருவரின் பின்னாலுமிருந்து இயங்கும், அந்த அகண்டாகாரமான ‘**நான்**'தான், உண்மையில் நம் ஒவ்வொருவரின் உடல்கள் மற்றும் மனங்கள் வழியாகத் தன்னை அறிந்துக் கொள்கிறது.

இந்த பேருண்மையை ஒருவர் தன்னுள் உணரும் பொழுது மட்டுமே, அவர் தன்னுடைய தற்போதைய தளத்திலிருந்து, தன்னைத்தானே பார்த்துக் கொள்ள முடிகிறது.

அப்போது மட்டும்தான் நம்மையே நாம் விஸ்வமாகக் காணமுடியும்.

அந்த விஸ்வரூபத்தைத்தான் பகவான் ஶ்ரீகிருஷ்ணர் தன்னை **விராட்** என்று கூறுகின்றார்.

அதாவது, நம்மை நாம் இந்த மொத்த பிரபஞ்சமாகக் காணமுடிகின்ற போதுதான் ஈஸ்வரன் என்பதுவும் நானே என்று புரியவரும்.

அப்பொழுது மட்டும்தான், "**நான் இந்த பிரபஞ்சத்தில் இருப்பதைப் போன்று, இந்த பிரபஞ்சம் என்னுள் இருக்கிறது**" என்ற ஆழமான கருத்தும் அறிய வரும்.

இந்த உடல் மட்டும்தான் '**நான்**' என்னும் எண்ணத்தை விடுத்து, தனக்குள் இருந்து இயங்கும் பேருணர்வுப் பிரக்ஞையை, இந்த **பிரபஞ்சப்பிரக்ஞை** என்று புரிந்துக் கொண்டால்தான் **விஸ்வரூபம்** என்னும் கருத்தின் உட்பொருளை, நாம் அனுபவ பூர்வமாக உணர்ந்துக் கொள்ளலாம்.

இந்த உண்மை தெள்ளத்தெளிவாகத் தெரியவரும் பொழுதுதான் திருமூலர் கூறிய '**தெள்ளத் தெளிந்தார்க்கு சீவன் சிவலிங்கம்**' என்பதும் புரிய வரும்.

அத்தகைய மகத்தானவர்களே மரணத்தை வென்றவர்கள்.

ஆம்! அவர்களுக்கு மட்டுமே '**என்**` மரணம் என்று தனியாக ஏதுமில்லை!

இந்த மரணம் என்பது, வந்து போகின்ற இந்த உடலுக்குத்தானே தவிர, தனக்கு இல்லை என்ற புரிதலில், **நான் பிறப்பதும் இல்லை!, இறப்பதும் இல்லை** என்ற நிலையில், அவர்களுக்கு **மரண பயம்** என்பது முற்றிலும் அற்றுப்போகின்றது.

ஒருவனுக்கு தூய்மையான '**நான்**' விழித்துக் கொள்ளும்போது, **புதிய சக்திகள்** வெளிப்படுகின்றன.

ஆனால், அந்தச் சக்திகளை உள்ளே இருக்கும் வாசனைகளை பற்றிக் கொள்கின்றன. அதனால்தான், சிலர் அந்த புதிய சக்திகளை **துஷ்பிரயோகம்** செய்ய ஆரம்பிக்கின்றனர்.

அதற்குக் காரணம், அவர்களுக்கு அந்த **சுயப்ரக்ஞை** விழித்துக் கொண்டாலும், அகமுதிர்ச்சி உடனே வந்து விடுவதில்லை.

'**நான்**' என்பது பிரபஞ்ச சிருஷ்டியின் மையம்.

அதாவது, ஈஸ்வரத்தன்மையில் இருந்துக் கொண்டு, இந்த சிருஷ்டிக்கு அப்பால், முதலும், முடிவும் இன்றி, கால, தேசமற்று நிற்கும் அந்த அகண்ட வஸ்துவை, அனுபவமாக அறிந்துக் கொள்ளும்வரை, வாசனைகளின் ஆதிக்கத்தில் இருந்து யாரும் தப்பிக்க முடியாது.

ஒருவன் தூய்மையான '**நான்**' என்னும் நிலையைத் தன்னுணர்வில் உணர்ந்த பிறகே தான் யார்?, தனக்கு ஆதாரமாக இருப்பது என்ன? என்று அறிந்து கொள்ளும் வேட்கை உண்டாகிறது.

அதன் பிறகுதான், '**நான்**' என்னும் உணர்வில் இலயித்துத் தன் வாசனைகளை முற்றிலும் விடுத்து, தனக்குள் தன்னில் தானாய் ஒடுங்க முடியும்.

அத்தகைய உள்ளத்துடன் தன்னையே அந்த பேருணர்விடம் (பரம்பொருளிடம்) ஒப்புவித்த நிலையில், அவனது மனம் அடங்கி, அந்த பேருணர்வின் பிரகாசத்தினால் தன் சொரூபத்தை தானே தரிசிக்க முடியும்.

இவ்வாறு எவன் ஒருவன் தன்னை அறிந்து தன்மயம் ஆகின்றானோ, அவன் **பிறப்பதும் இல்லை, இறப்பதும் இல்லை**.

இந்த **பிறப்பு - இறப்பு** எல்லாம் வந்து போகின்ற உடலுக்குத்தானே தவிர, உடலற்ற உணர்வாகிய அவனுக்கு **போக்கும், வரவும் ஏது?**

இந்தப்பாதையில் பயணித்த நம்முடைய முன்னோர்கள் **பிரக்ஞை** என்ற பேருணர்வு நம்முள்ளே இருப்பதை நாம் அறிந்துக்கொள்ள வேண்டும் என்ற அடிப்படையில், அறிவு முதிர்ச்சியற்ற **மனங்கள்** தன்

மனப்பிம்பத்தையே, “**நான்**” என்று கருதிக்கொண்டு அவர்களையே அவர்கள் அறிவதற்கு இன்னும் தகுதி பெற முடியாமல் வாழ்கிறார்கள் என்ற கருணையினால், அந்த உள்ளுணர்வை உணர்த்துகின்ற பக்தியுணர்வை வளர்த்தார்கள்.

அத்துடன், அவர்களது ஏற்றி வைக்கப்பட்ட ஏராளமான எண்ணங்களால் உண்டான, நினைவுகளின் அடிப்படையில் இயங்கும் **மனப்பிம்பம்** என்ற அஹங்காரம் (Ego), அவர்களிடம் அதிகம் உண்டாகியுள்ளதால், அவர்களால், அந்த உன்னத இறைவ(தன்)னை உணர்ந்துக் கொள்ள முடியாமல் இருக்கிறது என்பதைக் கண்டும், அந்த ஆணவமே ஆன்மாவை அறிவதற்கு, அவர்களுக்கு பெரும் தடையாகவும் இருக்கிறது என்பதினாலும், அந்த ஆணவத்தின் முடிவில்தான் **ஆன்ம விழிப்பு** உண்டாவது சாத்தியம் என்று கருதிய, நம் முன்னோர்கள் அவர்களை **உருவ வழிபாடு** செய்யும்படி ஊக்குவித்தார்கள்.

அவர்களால் உண்டாக்கப்பட்ட அந்த உருவ வழிபாட்டு முறைகள், அதற்கான சாதனங்கள் போன்றவைகள் எல்லாம் பக்குவமில்லாத மனதை பக்குவப்படுத்தி, ‘**அறிவுணர்வு**’ என்னும் ஆன்ம ஒளி, அவர்களது மனதில் பரவி, அந்த பரம(தன்)னை தன்னுள் உணர்ந்துக்கொள்ள வேண்டும் என்பதற்காக ஏற்படுத்திக் கொடுத்தனர்.

அதற்காக, அவர்கள் உண்டாக்கிக் கொடுத்த பரமனை அறியும் பக்தி உணர்வாகிய, பக்திப் பாதை, பலரால் **மூட பக்தியாக** மாற்றப்பட்டு விட்டது.

அதன் காரணமாக, அந்த பரமனிடம் **பணிவும், அன்பும்** பெருகுவதற்கு பதிலாக, **பணமும், பதவியும்** வேண்டும் என்ற வேண்டுதல்களாக மாறிவிட்டது.

பொதுவாக, புலன்களின் வழியாக அனைத்தையும் ஈர்க்கும் அறியாமை மனம், அந்த அறிவை அறிய வேண்டுமானால், அதற்காக அந்த மனம் பக்குவப்பட வேண்டும் என்பதினால், புற உலகத்தின் மீது பரவியிருக்கும் அதன் கவனத்தை ஒருமுகப்படுத்தி, அந்த ஒப்புயர்வில்லாத பரமனைப் பற்றிக்கொள்ள வேண்டும் என்ற அடிப்படையில் உண்டாக்கப்பட்ட **பக்திப் பாதைகள்** ஆகும்.

மேலும், அந்த புறத்தில் உள்ள உருவத்தின் மீது செலுத்தப்படும் **பக்தி உணர்வு**, அப்படியே, அவர்கள் அகத்தில் திரும்பி, தன் உள்ளுணர்வை உணர்ந்துக் கொண்டு உள்ளே மலரும் என்பதினால், தன்னுள்ளே உள்ள அந்த **உள்ளுணர்வை** ஒருவன் உள்ளத்தில் உணர்வதின் வாயிலாக, அந்த பேருணர்வில் மனம் மெல்ல, மெல்ல இலயிக்கத் தொடங்கி, அந்த ஆழமான இலயிப்பினால், **ஆன்ம விழிப்பு** ஏற்பட முடியும் என்று ஆசைப்பட்டனர்.

அத்துடன் அறியாமையில் இருப்பவர்கள், அனேக எண்ணங்களை தங்கள் மனதில் ஏற்றிக்கொண்டு, அதன் வாயிலாக உண்டாகிய சேகரிக்கப்பட்ட நினைவுகளின் மூலம் ஏற்படும் **கால, தேச** உணர்வில் இலயித்திருக்கும் வரை, அவர்களால் மனதைக் கடந்து, '**நான்**' என்னும் தன்னுணர்வில் தன்னை உட்படுத்திக் கொள்ள முடியாது.

அவர்கள் இந்த உருவ வழிபாட்டின் மூலம் உண்டாகும் **பக்தி உணர்வில்**, அந்த உள்ளுணர்வை உணர முடியும் என்று, அதற்கான, **இஷ்டதெய்வ வழிபாடு** முறைகளையும் உண்டாக்கி வைத்தனர்.

ஆனால், அந்த <u>உருவ வழிபாட்டின் ஆழ்ந்த உள்ளியக்க விதிகள்</u> குறித்து ஏதுமறியாமல் உள்ள இன்றைய அனேகரும், அறியாமையினால் அந்த உருவ வழிபாட்டை ஏளனம் செய்வதும், கடவுள் மறுப்புக் கொள்கை கொண்டவர்கள் ஒரு புறமும், அறியாமையில், ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்களால், பரமனை வியாபாரியாக்கிய மூட பக்தி கொண்டவர்கள் மறு புறமும், என இந்த இரண்டு சாரார்களுக்கும் **உண்மை** விளங்குவதில்லை.

இவர்களைப் போன்றவர்கள் கால, தேசமற்ற, தொடக்கமும், முடிவுமற்ற அந்த பேருண்மையை, **பேருணர்வை** உணர்ந்துக் கொள்ளும், உண்மையான நோக்கம் இன்றி, தங்கள் வயிற்றுப் பிழைப்புக்காக,

இதுப்போன்ற **ஆத்திக, நாத்திக** விசய, சுகங்களில் ஈடுபட்டுக் கொண்டு, மற்ற எல்லோரையும் குழப்பிக் கொண்டும் இருக்கின்றனர்.

உண்மையிலேயே, அந்த **பக்தி உணர்வுப் பாதை** வெகு சுலபமாக பயணிக்கக்கூடிய மென்மையான பாதை எனலாம்.

ஒருவனது உண்மையான பக்தி, அவனை **அநன்ய பக்தி** நிலைக்கு உயர்த்தி, அந்த **உள்ளுணர்வை** தன்னுள் உணர்ந்து, தனக்கு வேறாக தான் வழிபடும் இறைவன் ஒருவன் தனியாக இல்லை. அவன் என்னுள்ளேயே ஏக அறிவாக இருக்கிறான் என்ற உண்மையை, தன்னில் தானாய் அறிய முற்படும்பொழுது, அந்த **பேருணர்வுப் பிரபஞ்சம்**, தன்னையறிந்த தன்னுணர்வைக் கண்டு பெருமிதம் கொள்கிறது.

அதனால், அந்த பிரபஞ்ச பேருணர்வு, தன் உள்ளுணர்வை உணர்ந்த அத்தகைய உத்தமர்களுக்கு, **பிரபஞ்ச ஈர்ப்பு விதியின்படி**, உணர்வுப்பூர்வமாக அவர்கள் விரும்பியதை உடனே கொடுக்கக் கூடியதாகவும் இருக்கிறது.

அதற்கு முக்கியக் காரணம், அந்த பிரபஞ்ச பேருணர்வுக்கு, தனக்கு வேறாக இந்த மனித உள்ளுணர்வை தனித்துப் பார்ப்பது கிடையாது.

ஆனால், அறியாமையினால், மனிதன் மட்டுமே, அந்த பேருணர்வை உணர சக்தியற்றவனாக, மனதினால், **அது வேறு, நான் வேறு** என்று இருமைகளுடன் கூடியவனாக எல்லாவற்றையும் பிரித்துப் பார்த்துக் கொண்டிருக்கிறான்.

அத்தகைய பிரிவினை மனம் கொண்டவன், அந்த ஏக இறைவனை, **தன்னில் தானாய்** ஒரு நாளும் காண முடிவதில்லை.

உண்மையாகவே, அந்த பரம்பொருள் என்ற **வெட்டவெளி**, தன் பேருணர்வுப் பிரகாசத்தை, அறிவுப் பிரகாசமாக வெளிப்படுத்தியபோது, உண்டான பிரதிபிம்ப பிரகாசமே இந்த **பேருணர்வுப்பிரபஞ்சம்** என்பதினால், அந்த பேரறிவு பெரும் ஆவலோடு, தன் பிரதி பிம்பத்தைக் (மனதைக்) காண காத்திருக்கிறது. அதற்காக, அது அனைத்து உதவிகளையும் செய்யத் தயாராக இருக்கிறது.

ஆனால், மனதில் குப்பைகளை ஏற்றி வைத்துக் கொண்ட மனிதனோ, அந்த மகத்தான அறிவுப் பிரகாசத்தின் **பிரதிபிம்பம்** தன் மனதில் முழுமையாக பிரகாசிக்க முடியாதவாறு, ஏற்றி வைத்துக்கொண்ட எண்ணங்களால் ஆன, அதிக குப்பைகளால் மூடி, மறைத்துக் கொண்டுள்ளான்.

அரிதான மனிதப் பிறவியின் மகத்தான நோக்கமே, மனதின் தவறான நோக்கங்களை முழுமையாக அறிந்து, அதிலிருந்து மனதை விடுவித்து, அந்த அறிவை உணர்ந்து, அதனுடன் இரண்டறக் கலந்து விடும்போது மட்டும்தான், அந்த ஆதிசக்தியின் அனைத்து அம்சங்களும், அதனுடன் கூடிய ஆதி உணர்வாகிய பேரூணர்வுப் பெருமிதமும், நம்மை பகுத்தறிவுப் பரிமாண தளங்களில், உயர் பரிமாணமான பரமனின் **பரமபத தளத்தில்** கொண்டு சேர்க்கும்.

அதேசமயம், ஆத்மாவை அறிய விரும்பும் உண்மையான **ஆத்மசாதகன்** என்பவன், தன் அறியாமையை நீக்கிக்கொள்ள, சாஸ்திரமும், சரியான சத்குருவும் அவசியம் வேண்டும் என்பதில், எந்த விதமான சந்தேகத்திற்கும் இடமில்லாமல், இயன்றவரை நேரில் சென்று, சத்குருவை சரணடைந்து, சாஸ்திர விசாரங்களில் ஈடுபட்டு, சந்தேகம் தெளிந்தான் என்றால், அவன் **'நான் இந்த உடல் அல்ல. கால, தேசம் கடந்த ஆன்மா'** என்று அன்றைய ரிஷிகள் கூறியதை தவறாகப் புரிந்துக் கொள்ள மாட்டான்.

அவன் தன்னுடைய ஆத்ம முன்னேற்றத்திற்கும், ஆன்மாவை அனுபவமாக அறிவதற்கும் <u>இந்த மனித உடல் அவசியம்</u> என்பதை எளிதாக ஏற்றுக் கொள்வான்.

உண்மையில், இந்த **தேகாத்மபுத்தி** கூடாது என்று ஞானிகள் கூறியது, எதற்காக எனில், ஒருவன் இந்த

உடலையே ‘**நான்**’ என்று தவறாக நினைத்துக் கொண்டு இருக்கக்கூடாது என்பதற்காகத்தான் அவ்வாறு எடுத்துக் கூறினர்.

அதாவது, **உடல்**, **மனம்**, **ஆன்மா** என்ற இந்த மூன்றினுள், **மனம்** எப்போதும் இறந்த காலத்தை நினைத்துக் கொண்டோ, அல்லது எதிர்காலத்தைப் பற்றிக் கற்பனை செய்துக் கொண்டோதான் இருக்கும்.

ஆனால், **ஆன்மாவோ, கால, தேசம் அற்றது.**

அதேசமயம், அந்த ஆன்மாவை அனுபவமாக உணர வேண்டுமாயின், அதற்கான சாதனமாக நமக்கு மனித உடல் கொடுக்கப்பட்டிருக்கிறது. அந்த மனித உடல் என்பது இப்பொழுது, இந்த விநாடியில், நம் நிகழ்காலத்தில் உள்ளது.

அதேசமயம், உடலுக்கென்று தனித்துவமான **சுயம்** கிடையாது. அது ஆன்மாவைச் சார்ந்துதான் நிலைக் கொண்டுள்ளது.

அதனால், அது தன்னை யார்? என்று அறிந்துக் கொள்வதற்கான ‘**அறிவு**’ அதனிடம் கிடையாது.

ஆனால், நம் மனதில், உடல் அபிமானமும், இந்த உலகத்தைப் பற்றிய ஒரு கண்ணோட்டமும், நம் **தன்னுணர்வை** மனதுடன் இணைத்துக் கொண்டுள்ளது.

அவ்வாறு, அந்த மனதில் பதிய வைத்திருக்கும், நினைவுப் பதிவுகள் எல்லாம் சேர்ந்து, அந்த மனதில் ஒரு **பிம்பத்தை** சுயமாக உண்டாக்கிக் கொண்டுள்ளது. அந்த பிம்பத்தின் அடிப்படையில், இந்த உடலையும், உலகத்தையும் உண்மை என்று கருதுகிறோம், அதில் இந்த உடலை "**நான்**" என்று அபிமானிக்கிறோம்.

நாம் பொதுவாக '**நான்**' என்று கருதுவது, ஆன்மாவையல்ல. நம்மால் மனதில் ஏற்றி வைத்துக் கொண்ட **அந்த பிம்பத்தைத்தான்.**

அதனால், உண்மையான ஆன்மாவான '**நான்**' என்பதை, கொடுக்கப்பட்ட மனித உடலின் வாயிலாக உணர முடியாதவாறு, நாம் தன்னுணர்விலிருந்து வெகுதூரம் விலகியிருக்கிறோம்.

ஆகவே, இந்த உடலில் ஓடிக்கொண்டிருக்கும், உணர்வாகிய உயிர்ச் சக்தியின் உள்ளுணர்வில், எப்பொழுதும் இடையறாது '**நான், நான்**' என்று அதிர்ந்துக் கொண்டிருக்கும், அந்த **தன்னுணர்வில்** நம் கவனத்தைத் தொடர்ந்து நிலைக்கச் செய்யும்போது, பேரண்டத்தின் பேருணர்வாகிய ஆன்மாவை அறிந்து, உணர்ந்து கொள்ள முடியும்.

ஆகவே, **அகவாழ்க்கை** என்பதை என்னவென்றே அறியாத அனேக மனிதர்கள், மகத்தான மனிதப்

பிறவியின் பெருமையை உணராமல், இந்த உடலை மட்டுமே உண்மை என்று கருதிக்கொண்டு, உலக விசய, சுகங்களில் ஆர்வமாக மூழ்கிக்கொண்டு, இந்த பிறவிப் பெருங்கடலைக் கடக்க விரும்பாமல், அதிலேயே எப்பொழுதும் தத்தளித்துக் கொண்டு இருக்கவே விரும்புகின்றனர்.

ஆகவே, மனதைக் கடந்த மகத்தான அறிவை "**நான்**" என்று அறிந்து உணர்ந்துக் கொள்ள வேண்டுமாயின்,

1) மனதின் ஏற்றிக்கொண்ட தேவையற்ற எண்ணங்கள் இறக்க வேண்டும்.

2) இறைவனை உணர்வதற்கான ஆழமான ஆசை மனதிற்கு உண்டாக வேண்டும்.

3) அமைதியும், பொறுமையும் கொண்ட ஆக்கப் பூர்வமான மனம் வேண்டும்.

4) சாஸ்திரம், சத்குரு இவைகளில் அசைக்க முடியாத நம்பிக்கை வேண்டும்.

5) விடாமுயற்சியும், திறமையும், தன்னம்பிக்கையும் இருக்க வேண்டும்.

6) அனைத்திலும் நன்றி உணர்வு உண்டாக வேண்டும்.

அழியக்கூடிய உடலில்தான் அழியாத உணர்வு உயிர்ச்சக்தியாக உள்ளது என்பதை உணர்ந்துக் கொள்வதே உன்னத மனிதப் பிறவியின் மகத்துவம் ஆகும்.

**ஓம் தத் ஸத்!**

